

கற்க கசடற க் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.

# குறள் விருந்து



தி.வ.ஆ.-2053 தை- 11 பொ.ஆ.-2022 சனவரி-24

திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ்

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்







குறளைக் கற்போம் குழந்தைகளே

குன்றெனப் புகழைக் குவிப்போமே

பிஞ்சு வயதினில் கற்றிடும் குறளால்

நெஞ்சில் நன்னெறி விதைப்போமே

சிறுவர்கள் பயிலும் குறள்நெறியால்

பெருமைகள் பலவும் சேர்ப்போமே

வள்ளுவர் தந்த வான்மறையால்

வாழ்வில் சிறப்புடன் உயர்வோமே

நாடும் வீடும் நலம் பெறவே

நாளும் குறளைக் கற்போமே

கசடறக் கற்றுத் தெளிவோமே

கற்றபின் அதன்வழி நிற்போமே

வல்லரசாய் நாட்டை வளர்ப்போமே

வல்லமை பெற்றிட உழைப்போமே

சிறப்பாசிரியர்கள்:பாவலர் முரசு நெடுமாறன் & திருமதி.தாமரை சீனிவாசராவ்

பொறுப்பாசிரியர்:மறைமலை இலக்குவனார்

**சிறுவர் குறள் விளக்க நாடகம்**



**மழையும் ஒழுக்கமும்**

**----முரசு நெடுமாறன்**

**இந்த நாடகத்தை இயற்றி வழங்கியவர் “மலேசியாவின் அழ.வள்ளியப்பா “என்று பாராட்டப்படும் மலேசியப் பாவலர் முனைவர் முரசு நெடுமாறன் ஆவார்.மலேசியத் தொலைக்காட்சியிலும் வானொலியிலும் ஆயிரக்கணக்காகக் குழந்தைப் பாடல்களும் நாடகங்களும் படைத்து வழங்கிய வரலாற்றுச்சாதனையாளர் இவரே.. “மலேசியக் கவிதைக்களஞ்சியம் என்னும் இவரது தொகுப்பு நூல் மலேசியாவில் இருநூறாண்டுகளாக வளர்ந்துவரும் தமிழ்க்கவிதையின் வரலாற்றைக் கூறுவது.தமது கவிதைப் பணிக்காகத் தமிழக அரசால் பாரதிதாசன் விருது வழங்கிச் சிறப்பிக்கப்பட்ட முதல் அயல்நாட்டவர்.)**

## காட்சி 1

| | | |
|---|---|---|
| இடம் | : | இல்லம் |
| நடிப்போர் | : | பூவரசு, சுடர்மதி |
| காலம் | : | இரவு |
| நிலை | : | அன்று முழுதும் ஓயாத மழை. காற்றும் மிகக் கடுமையாக வீசியது. |

இடியும் மின்னலும் அச்சத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தன. தெரு விளக்குகளோடு வீட்டு விளக்குகளும் அணைந்து இருள் சூழ்ந்திருந்தது.

சில மெழுகுவர்த்திகள் மட்டும் எரிந்து கொண்டிருந்தன.

பூவரசு : அம்மா, அம்மா, இங்கே வாங்க.

சுடர்மதி : என்ன பூவரசு. உனக்கு என்ன வேண்டும் .

பூவரசு : எனக்கு வெளிச்சம் வேண்டும்.

சுடர்மதி : அதுதான் மெழுகுவர்த்தி எரிந்து கொண்டிருக்கிறதே.

பூவரசு : இந்த வெளிச்சத்திலே எப்படிப் படிக்க முடியும் ? நாளைக்குப் பள்ளியிலே முக்கியமான தேர்வு நடக்க இருக்கிறது.

சுடர்மதி : வீட்டில் மூன்று மெழுகுவர்த்திகளே இருந்தன. நீ படிக்க ஒன்று; முற்றத்திலே ஒன்று; வரவேற்பு அறையிலே ஒன்று. வேண்டுமானால் முற்றத்திலே உள்ள மெழுகுவர்த்தியையும் கொண்டு வந்து வைக்கிறேன்.

பூவரசு : எனக்கு 20 மெழுகுவர்த்திகள் வைத்தாலும் போதா. அப்பா எங்கே?

சுடர்மதி : அப்பா பக்கத்து வீட்டுக்காரரிடம் மெழுகுவர்த்திகள் இரவல் வாங்கப் போயிருக்கிறார்.

பூவரசு : என்ன?மெழுகுவர்த்தி வாங்கப் போயிருக்கிறாரா? எனக்கு மின்சார விளக்குத்தான் வேண்டும்.

சுடர்மதி : மழை இடி மின்னல் கடுமையானதால் மின் தொடர்பு அறுந்து விட்டது. மின்சார விளக்குகள் எரிய இன்னும் நீண்ட நேரம் ஆகும்.

பூவரசு : பாழாய்ப் போன மழையால் நமக்கு எத்துணைத் தொல்லை!

சுடர்மதி : மழை நாள்தோறுமா இப்படிப் பெய்கிறது? கடுமையாகப் பெய்வது சில நாள்களில்தானே?

…..ம்….. அதோ! அப்பா வருகிறார்.

(காட்சி முடிவு)

காட்சி 2

இடம் : இல்லம்

நடிப்போர் : பூவரசு, சுப்பையா, சுடர்மதி

நேரம் : இரவு

நிலை : சுப்பையா இரவல் வாங்கி வந்த மெழுவர்த்திகள் ஏற்றப்படல். பூவரசு மழையைத் திட்டுதல். தந்தை சுப்பையா மழையின் சிறப்புகளை விளக்குதல்.

சுப்பையா : சுடர்மதி,இந்த மெழுகுவர்த்திகளில் நாலைந்தை ஏற்றிவை. பூவரசு படிக்க வேண்டும்.

சுடர்மதி : அவனுக்கு 20 மெழுகுவர்த்திகள் ஏற்றிவைத்தாலும் போதாவாம். மின்சார விளக்குகள் வேண்டுமாம்.

சுப்பையா : என்ன பூவரசு, ஏன் பிடிவாதம் செய்கிறாய்? நாங்களெல்லாம் அகல் விளக்கு வெளிச்சத்தில் படித்தவர்கள் தெரியுமா?

பூவரசு : நீங்கள் படித்த மாதிரியேதான் நாங்களும் படிக்க வேண்டுமா ?

சுப்பையா : மழைக்காலத்தில் இப்படியெல்லாம் நடப்பது இயல்பு. இடி மின்னல் நின்றவுடன் விளக்குகள் எரியத் தொடங்கும்.

பூவரசு : அப்படியென்றால் இடி மின்னலை நிறுத்துங்கள்.

சுப்பையா : இடி மின்னலை எப்படி நிறுத்த முடியும்? இடி மின்னல் மழை எல்லாம் இயல்பாய் ஏற்படும்; தாமே நின்றுவிடும்.

பூவரசு : பொல்லாத இடி;பொல்லாத மின்னல்;பொல்லாத மழை.......

சுப்பையா : பூவரசு, மழையின் சிறப்புப்பற்றி நீ இன்னும் உணராமல் இருக்கிறாய். மழை பெய்யாமல் நின்று போனால் பயிர் பச்சை விளைய முடியாது. பசிக்கு உணவுதரும் தாவரம் எதுவுமே விளையாமல் போகும். அதனால் உயிரினும் மேலான ஒழுக்கமும் கெட்டழியும்.

பூவரசு : மழை பெய்யாவிட்டால் செடி கொடி ஏதும் விளையாமல் போகலாம். ஒழுக்கம் எப்படிக் கெடும்?

சுடர்மதி : பூவரசுக்குத் திருக்குறளில் உள்ள வான் சிறப்புப்பற்றிக் கூறுங்கள்.

சுப்பையா : கூறுவேன். மழைபெய்யாவிட்டால் தானியம் ஏதும் விளைய முடியாது அல்லவா?

பூவரசு : ஆமாம்.

சுப்பையா : உண்பதற்கு உணவு இல்லா விட்டால் என்ன ஆகும் ?

பூவரசு : நம்மைப் பசிவாட்டும்.

சுப்பைய : “பசிவந்தால் பத்தும் பறந்து போம்” என்பார்கள். அவை மானம், குடிப்பெருமை, கல்வியால் பெற்ற அறிவுத்திறன், மற்றவர்க்கு உதவ வேண்டுமென்னும் நல்லெண்ணம் என்பன போன்ற எதுவுமே இல்லாமல் போகும் வயிற்றுக்கு எப்படியாவது உணவு தேடவேண்டுமென்று திருடச் சொல்லும், மானத்தைப்போக்கும் கீழ்த்தரமான செயல்களில் ஈடுபடச் செய்யும் அதனால் ஒழுக்கம் கெட்டுப் போகும்.

சுடர்மதி : ஒரு திருக்குறளை எடுத்துக் காட்டி விளக்குங்களேன்.

சுப்பையா : விளக்குவேன், பூவரசு, நீ திருக்குறள் படித்திருக்கிறாய் தானே?

பூவரசு : படித்திருக்கிறேன். பள்ளியிலே சொல்லிக் கொடுத்திருக்கிறார்கள்.

சுப்பையா : எங்கே, ஒரு திருக்குறளைக் கூறு.

பூவரசு : “நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வான்இன்று அமையாது ஒழுக்கு” (20)

சுடர்மதி : அருமையான குறள். பூவரசு குரலில் இந்தக் குறளை கேட்கும் பொழுது காதில் தேன் பாய்கிறது.

சுப்பையா : எனக்கு என்ன வியப்பு என்றால் நான் எந்தக் குறளை
எடுத்துக் காட்ட நினைத்தேனோ, அந்தக் குறளையே
பூவரசுசொன்னது ஆச்சரியம்தான்.

பூவரசு : எனக்கு இந்தக் குறள் தெரியும் ஆனால் இதன் பொருள்
முழுமையாய்த் தெரியாது.

சுப்பையா : திருக்குறள் தெரிகிறதே, அதுபோதும். இரண்டுமூன்று முறை
ஆழ்ந்து படித்தாலோ கேட்டாலோ பொருளைப் புரிந்து
கொள்ளலாம்.

பூவரசு : இந்தக் குறளின் பொருளை விளக்குங்கள் அப்பா.

சுப்பையா : திருக்குறளின் வான் சிறப்பு என்ற அதிகாரத்தில் உள்ள 10
குறள் பாக்களும் சிறப்பானவையே. மனித வாழ்வுக்கு நீர்
எவ்வளவு முக்கியமானது; நீர்தரும் மழை எத்துணை
முதன்மையானது என்பதை அழகாக விளக்குகிறார்
திருவள்ளுவர்.

பூவரசு : எனக்கு இந்த அதிகாரத்தில் மூன்று குறள்பாக்கள் மட்டுமே
தெரியும்?

சுப்பையா : இன்று நீர் பற்றியும் அதைத்தரும் மழைபற்றியும் சில
செய்திகளைச் சொல்வேன்.

சில நேரங்களில் கடுமையாகப் பெய்து நமக்குத் துன்பம் தரும்
மழைதான், நம் வாழ்வுக்கே உயிர் நாடியாக விளங்குகிறது.

பூவரசு : “கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற்றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை”
என்பதுதானே இதற்குரிய குறள் ?

சுடர்மதி : பூவரசு, நீ சரியாகக் கண்டு பிடித்துச் சொல்லி விட்டாய். பாராட்டுகள்!

சுப்பையா : அருமை ,அருமை, இப்பொழுது குறளின் பொருளைப் பார்ப்போம்.

“நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வான்இன்று அமையாது ஒழுக்கு”

என்ற குறளின் பொருளைச் சற்று ஆழமாகப் பார்ப்போம்.

பூவரசு : முதலில் ஒழுக்கு என்பதன் பொருளைக் கூறுங்கள் அப்பா.

சுப்பையா : ஒழுக்கு என்பதற்குச் சொட்டுச் சொட்டாக ஒழுகுதல் என்பது ஒரு பொருள்.

ஒழுங்கு அதாவது நன்னடத்தை என்பது மற்றொரு பொருள். இங்கு நன்னடத்தை என்று பொருள் கொள்ள வேண்டும்.

பூவரசு : அமையும் என்பதன் பொருள் ?

சுப்பையா : அமையாது என்றால் முடியாது என்று பொருள். அமையும் என்றால் உண்டாகும், பொருந்தும் என்று பொருள்.

பூவரசு : வான் என்பதன் பொருளைக் கூறுங்கள் அப்பா.

சுப்பையா : வான் என்பதற்கு விண்ணென்று ஒருபொருள் உள்ளது. இங்கே மழை என்று பொருள். வான்இன்று என்றால் மழை பெய்யாவிட்டால் என்று பொருள் கொள்ள வேண்டும்.

பூவரசு : குறளின் முழுமையான பொருளை எனக்கு விளங்குமாறு கூறுங்கள் அப்பா.

சுப்பையா : தண்ணீர் இல்லாமல் போனால் உலகத்தில் உயிர்கள் வாழ முடியாது. அதுபோல உலக மக்களுக்கு மழைவளம் இல்லாவிட்டால் உயிர்போன்ற ஒழுக்கமும் நிலைபெற முடியாமல் போய்விடும் என்பது இந்தக் குறளின் பொருள்.

சுடர்மதி : எனக்குக்கூட இந்தக் குறளின் முழுப் பொருளும் இன்றுதான் தெளிவாகப் புரிந்தது.

பூவரசு : தண்ணீரின் இன்றியமையாமையை நான் இன்றுதான் உணர்ந்தேன். உலக மக்களின் உயிர்காக்கும் தண்ணீரை இனிமேல் நான் வீணாக்க மாட்டேன்; சிக்கனமாகப் பயன்படுத்துவேன்.

சுடர்மதி : பூவரசுக்கு நீரின் முக்கியம் பற்றிப் பலமுறை கூறியிருக்கிறேன். இன்றாவது நீரின் முதன்மை பற்றி உணர்ந்து கொண்டது எனக்கு மகிழ்சியளிக்கிறது. (அப்போது மின் விளக்குகள் எரியத் தொடங்குதல்)

பூவரசு : (துள்ளிக் குதித்து) வெளிச்சம் வந்து விட்டது! வெளிச்சம் வந்து விட்டது!

சுடர்மதி : இடியும் மின்னலும் இல்லாமல் போயின. மழையும் நின்று விட்டது.

பூவரசு : வீட்டில் வெளிச்சம் பரவியதுபோல் மழையைப் பற்றி எனக்கு இருந்த அறியாமை இருளும் நீங்கியது.

சுப்பையா : திருக்குறளின் இரண்டாம் அதிகாரமான வான் சிறப்பின் பொருளை நீங்கள் தெளிவாகப் புரிந்து கொள்ளவும் இந்த மழை உதவியது. வாழ்க மழை! (எல்லாரும் கைதட்டி மகிழ்தல்)

## உருவுகண்டு எள்ளாமை வேண்டும்



--திருமதி தாமரை சீனிவாசராவ்

(ஆங்கோர் தமிழ்ச்சங்கத்தின் பொருளாளர்;சிறந்த பொழிவாளர்;சமூகநலத் தொண்டர்;அமைப்பாளர்; பாவலர்; எழுத்தாளர்; நம் இதழின் சிறப்பாசிரியர்.)

உருவத்தை வைத்துக் கொண்டு எதையும் நாம் எடைபோட்டு விடக்கூடாது.

உருண்டு ஓடும் மிகப்பெரிய தேருக்கு அச்சாணியாக இருப்பது உருவத்தில் மிகச் சிறியதாகவே இருக்கும். அதைப் போலவே கடுகு சிறுத்தாலும் காரம் போகாது என்று கூறக்கேட்டுள்ளோம்.

எனவே நமது திறமை நாம் செய்யும் செயலை வைத்துத்தானே தவிர, நமது உருவத்தை வைத்தோ, வயதை வைத்தோ அல்ல. நாம் பல நேரங்களில் உருவத்தையும் வெளித் தோற்றத்தையும் வைத்து பிறரைத் தவறாக எடைபோட்டு விடுகிறோம் .ஆனாலும் நமது சமய வரலாற்றிலேயே மிகப் பெரும் ஆளுமை வாய்ந்த

திருஞானசம்பந்தமூர்த்தி, மூன்று வயதிலேயே, இறைவியிடம் ஞானப்பால் பெற்று, மறையோர்கட்கெல்லாம் ஏற்பட்ட ஐயங்களை நீக்கி, பெரும் உரையாற்றினார் என்று படிக்கிறோம். அவரின் பெருமையை அறிந்து, திருநாவுக்கரசரும், அவரைச் சந்திக்கச் சீர்காழிக்குப் புறப்பட்டு வந்து, பல கருத்துப்பரிமாற்றங்களை மேற்கொண்டு, வயது பேதம் இல்லாமல் அருட்கடலும், அன்புக்கடலுமாய் உறவாடிநின்றார்கள்.

தற்காலத்தில் குழந்தைகள் பொதுவாகவே மின்னணுச்சாதனங்களைக் கையாள்வதிலும், கணினி, அலைப்பேசி ஆகியவற்றில் அவர்கள் காட்டும் புலமையும் அனைவரையும் வியக்க வைக்கிறது. எளிதாகவும், வேகமாகவும் அவர்கள் பல துறைகளில் திறமையுடன் இருப்பது, பல கலைகளைக் கற்றுத் தேர்வது என அனைத்துமே இக் குறளுக்குச் சான்றாகத்தான் உள்ளது. முக்கியமாக

இளம் சாதனையாளர்கள் பட்டியல் நம்மை வியக்கவைக்கிறது.

சொபர்னோ ஐசக்பரி என்கிற ஒன்பது வயதுச்சிறுவன், இளவயதுப் பேராசிரியராக இருக்கிறார். தம்முடைய இரண்டாவது வயதில் இருந்து புத்தகங்களை வேகமாக வாசிப்பது, கணக்கு மற்றும் இயற்பியல் பாடங்களில் எந்தவிதக் கேள்விகளுக்கும் தகுந்த பதில் மற்றும் தீர்வு அளிப்பது என்று சிறந்துவிளங்குகிறார். நான்கு வயதில் முன்னாள் அமெரிக்க அதிபர் பராக் ஒபாமாவிடம் தம்முடைய திறமைகளுக்கான அறிந்தேற்பு மற்றும் பாராட்டைப் பெற்று, நோபல் பரிசு பெற்ற திரு. கைலாசு சத்யார்த்தியிடம் " உலக மழலைப் பேரறிஞர்" (Global Child Prodigy) விருதைப் பெற்றார். ஆர்வர்டு பல்கலைக் கழகத்தால், பாராட்டைப் பெற்று தற்போது இளவயதுப் பேராசிரியராக வலம்வருகிறார். இதைப் போலவே இசை,விளையாட்டு, கலை, கல்வி என அனைத்துத் துறைகளிலும் பெரியவர்களைவிட சிறந்து விளங்கும் நிலைமையைப் பார்க்கிறோம்.

எனவே உருவத்தை வைத்து நாம் எடைபோடுவது என்பது சரியான ஒன்றல்ல. இதைப்போய் இவரால் செய்யமுடியுமா என்று

எண்ணாமல், எல்லாரிடமும் தனிப்பட்ட திறமை உள்ளது, முயற்சி உள்ளது, சாதிக்கும் சக்தி உள்ளது என்பதை அறிந்து அனைவரையும் மதித்து போற்றுதல் வேண்டும். எவ்விதச் சூழலிலும் உருவத்தை மட்டுமே வைத்து நாம் எதையும் எடைபோடுதல் தவறான முடிவுகளையே தந்துவிடும். மூன்றடி வாமன அவதாரமும், ஒன்றே முக்கால் அடி வள்ளுவமும் இதையே நமக்கு உணர்த்துகின்றன என்றால் அது மிகையாகாது. எனவே உருவத்தை வைத்து எடைபோடுவதைத் தவிர்ப்போம். அலைகடலில் நிற்கும் படகிற்கு சிறுநங்கூரமே பாதுகாப்பு. அதுபோன்றே அறிவார்ந்த மக்களை அறிவால் அறிந்து பாராட்டுவோம்.

உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்கு
அச்சாணி அன்னார் உடைத்து
குறள் : 667, வினைத்திட்பம்



## திருக்குறள்

சாதிமதங்கள் சொல்லா நூல் – எந்த
சாத்திரச் சிக்கலும் இல்லா நூல்!

நாட்டின் பெயரை நவிலா நூல் - அந்த
வீட்டின் மொழியை விளம்பா நூல்!

இனத்தைப் பற்றி எழுதா நூல் - மனித
குணத்தைப் பற்றியே கூறும் நூல்!

காலம் தோறும் நிற்கும் நூல் - என்றும்
ஞாலம் வாழ வாழும் நூல்!

திருக்குறள் என்னும் தீந்தமிழ் நூல்! - இந்தத்
தரையில் சிறந்த தீர்ப்பு நூல்!

--பாவேந்தர் விருதுப் பாவலர் கண்மதியன்



கற்க கசடற க் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.

# குறள் விருந்து




தி.வ.ஆ.-2053 மாசி- 12 பொ.ஆ.-2022-பெப்ருவரி-24

திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ்

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்









குறளைக் கற்போம் குழந்தைகளே

குன்றெனப் புகழைக் குவிப்போமே

பிஞ்சு வயதினில் கற்றிடும் குறளால்

நெஞ்சில் நன்னெறி விதைப்போமே

சிறுவர்கள் பயிலும் குறள்நெறியால்

பெருமைகள் பலவும் சேர்ப்போமே

வள்ளுவர் தந்த வான்மறையால்

வாழ்வில் சிறப்புடன் உயர்வோமே

நாடும் வீடும் நலம் பெறவே

நாளும் குறளைக் கற்போமே

கசடறக் கற்றுத் தெளிவோமே

கற்றபின் அதன்வழி நிற்போமே

வல்லரசாய் நாட்டை வளர்ப்போமே

வல்லமை பெற்றிட உழைப்போமே

சிறப்பாசிரியர்: முனைவர் முரசு நெடுமாறன் பொறுப்பாசிரியர்: திருமதி.தாமரை சீனிவாச ராவ்

ஆசிரியர்:மறைமலை இலக்குவனார் இணை ஆசிரியர்: தி.ஈழக்கதிர்



# எனக்கு எதுவுமே வேண்டா!

----முரசு நெடுமாறன்

இந்த நாடகத்தை இயற்றி வழங்கியவர் “மலேசியாவின் அழ.வள்ளியப்பா “என்று பாராட்டப்படும் மலேசியப் பாவலர் முனைவர் முரசு நெடுமாறன் ஆவார்.மலேசியத் தொலைக்காட்சியிலும் வானொலியிலும் ஆயிரக்கணக்காகக் குழந்தைப் பாடல்களும் நாடகங்களும் படைத்து வழங்கிய வரலாற்றுச்சாதனையாளர் இவரே.. “மலேசியக் கவிதைக்களஞ்சியம் என்னும் இவரது தொகுப்பு நூல் மலேசியாவில் இருநூறாண்டுகளாக வளர்ந்துவரும் தமிழ்க்கவிதையின் வரலாற்றைக் கூறுவது.தமது கவிதைப் பணிக்காகத் தமிழக அரசால் பாரதிதாசன் விருது வழங்கிச் சிறப்பிக்கப்பட்ட முதல் அயல்நாட்டவர்.)

## <u>காட்சி 1</u>

இடம் : இல்லத்தின் ஒரு பகுதி

கதைமாந்தர் : அருள்மாறன் (அண்ணன்), மதியழகன் (தம்பி)

.

நேரம் : மாலை

நிலை : தனக்குத் திருமணம் நடக்கப் போகிறது என்றும், உனக்கு என்னென்ன உடைகள் வேண்டுமெனவும் அண்ணன் தம்பியிடம் கேட்டல்; தம்பி தனக்குப் புதிய உடைகள் மட்டும் அல்ல, வேறு எதுவுமே தேவை இல்லை எனல்.

அருள்மாறன் : வா தம்பி. உட்கார் , எனக்கு விரைவில் திருமணம் நடக்கவிருக்கிறது.

மதியழகன் : அதுதான் எனக்குத் தெரியுமே அண்ணா. பெண் பார்க்க நானும் வந்தேனே.

அருள்மாறன் : ஆமாம் ; ஆமாம். திருமணநாள் நெருங்கிவிட்டது. பெண்ணுக்கு வேண்டிய பட்டுப்புடவை உட்பட எல்லாம் வாங்கியாகிவிட்டது. எனக்கு வேண்டிய வேட்டி, சட்டைக்குரிய துணி எல்லாம் எடுத்தாகிவிட்டது. அப்பாவுக்கும் அம்மாவுக்கும் உனக்கும் தங்கைக்கும் வேண்டியவற்றை வாங்க வேண்டும். நீயும் தங்கையும் எங்களுடன் வரவேண்டும்.

மதியழகன் : திருமணம் உங்களுக்குத்தானே அண்ணா ! மற்றவர்களுக்குக் கண்டதையெல்லாம் ஏன் வாங்க வேண்டும்? எனக்கு தேவையான எல்லாம் உள்ளன; புதிதாய் எதுவும் வேண்டா.

அருள்மாறன் : நான் , அம்மா, அப்பா, தங்கை ஆகிய எல்லாரும் புதிய உடைகள் அணிந்திருக்கும்போது, நீ மட்டும் பழைய உடையோடு திருமணத்திற்கு வரலாமா?

மதியழகன் : அண்ணா , பொங்கலுக்குத்தான் நம் எல்லாருக்கும் புதிய உடைகள் வாங்கினோம். பொங்கல் அண்மையில்தானே

நடந்து முடிந்தது. அதற்குள் மீண்டும் புத்தாடைகள் வாங்க வேண்டுமா? அந்தஉடைகளைத்துவைத்துப் பெட்டி போட்டுப் பயன்படுத்திக் கொள்ளலாம் அல்லவா? என்னிடம் உள்ள உடைகள் இன்னும் பல ஆண்டுகளுக்குப் போதுமே

அருள்மாறன் : என்னிடம் கூட நிறைய உடைகள் உள்ளன. எனக்கு மட்டும் ஏன் புதிய ஆடைகள்?

மதியழகன் : நீங்கள் புது மாப்பிள்ளை , புத்தாடை வேண்டா என்றாலும் விட மாட்டார்கள்.

அருள்மாறன் : அப்படி யானால் உனக்கு ?

மதியழகன் : நான்தான் கூறிவிட்டேனே. எனக்குப் புதிய உடைகள் வேண்டவே வேண்டா.

அருள்மாறன் : அம்மாவும் அப்பாவும் வரட்டும். அவர்கள் கருத்தைக் கேட்போம்.

மதியழகன் : அவர்களும் உங்களைப்போல்தான் பேசுவார்கள். ஒருவேளை அப்பா ஒப்புக் கொண்டாலும் அம்மா விடவே மாட்டார்.

அருள்மாறன் : ம்..... பார்ப்போம்!

(காட்சி முடிவு)

**காட்சி 2**

இடம் : வீட்டின் ஒரு பகுதி

கதைமாந்தர் : அருள்மாறன் , மதியழகன்,தந்தை சேக்கிழார், அன்னை காவேரி, தங்கை மல்லிகை.

நேரம். : பிற்பகல்

நிலை : அருள்மாறன்திருமணத்தையொட்டித் துணிமணிகள்வாங்குவதுபற்றி உரையாடுதல்.

சேக்கிழார் : எல்லாரும் சுவையான சிற்றுண்டி அருந்தி மகிழ்ந்தோம். இப்பொழுது நம் அருள்மாறன் திருமணத்தைப் பற்றிக் கொஞ்சம் கலந்துரையாடலாமா?

மல்லிகை : ம்...... பேசலாம் ; பேசலாம்.

சேக்கிழார் : பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் வேண்டிய துணிமணி எல்லாம் வாங்கிவிட்டோம். இனி மற்றவர்களுக்கு வேண்டிய உடைகள் வாங்க வேண்டும்.

மதியழகன் : திருமணம் பெண்ணுக்கும் மாப்பிளைக்கும் தாமே! மற்றவர்களுக்குப் புத்தாடை எதற்கு?

காவேரி : டேய்! நீ என்ன உளறுகிறாய் ?

சேக்கிழார் : அதுதானே! மதியழகன் ஏன் இப்படிப் பேசுகிறான் ?

காவேரி : யாராவது அவனுக்குச் சொல்லிக் கொடுத்தார்களோ ?

மதியழகன் : ஆம்!

சேக்கிழார் : சொன்னவன் யார் ? சொல்; உடனே சொல். அவனை....

மதியழகன் : அவரை என்ன செய்வீர்கள் ?

சேக்கிழார் : அவனை , என் பிள்ளையைக் கெடுக்காதே என்று கண்டிப்பேன்.

மதியழகன் : (கையிலிருந்த திருக்குறளைக் காட்டி) சொன்னவர் திருவள்ளுவர்.

சேக்கிழார் : என்ன , திருவள்ளுவரா?

மதியழகன் : ஆம்! திருவள்ளுவர்தான்.

சேக்கிழார் : திருவள்ளுவர் உன்னை எப்போது சந்தித்தார் ? நீ எங்கே சென்று அவரைச் சந்தித்தாய்.

மதியழகன் : திருவள்ளுவர் ஈராயிரம் ஆண்டுகளுக்குமுன் வாழ்ந்தவர். ஆனால் திருக்குறளாக இன்னும் நம்முடன் வாழ்ந்து கொண்டிருக்கிறார்.

சேக்கிழார் : நானே இன்னும் திருக்குறளைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. நீ எப்படி.....

மதியழகன் : நம் திருவள்ளுவர் கழகத்தில் ஞாயிற்றுக்கிழமை தோறும் திருக்குறள் வகுப்பு நடந்து வருகிறது அல்லவா? நான் அந்த வகுப்பிற்குத் தவறாமல் செல்வது உங்களுக்குத் தெரியும். அங்கு இரண்டு வாரங்களுக்கு முன் மூத்த பேராசிரியர் ஒருவர் வந்து சொற்பொழிவு ஆற்றினார். ‘வேண்டாமை’ என்ற தலைப்பில் சிறுவர்களும் புரிந்துகொள்ளும் வண்ணம் எளிமையாக

இனிமையோடு பேசினார். அது குறித்து நான் பலவாறு சிந்தித்தேன். பள்ளியில் என் வகுப்பாசிரியரிடமும் கேட்டுத் தெளிவு பெற்றேன்.

அருள்மாறன் : பேராசிரியர் எடுத்துக்காட்டிய குறள் எது ?

மதியழகன் : “வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டுஇல்லை
யாண்டும் அஃதுஒப்பது இல் (363)

அருள்மாறன் : எங்கே , அதற்குவிளக்கம் கூறு.

மதியழகன் : இது திருக்குறளின் 37ஆம் அதிகாரத்தில் ‘அவா அறுத்தல்’-அதாவது ஆசைகளை ஒழித்தல் என்ற அதிகாரத்தில் மூன்றாம் குறளாக வருகிறது.

சேக்கிழார் : சரி , குறளின் பொருளை விளக்கு.

மதியழகன் : எனக்குத் தெரிந்தவரை சொல்கிறேன். பொதுவாக எந்தப் பொருளையும் விரும்பாமல் இருப்பது ஒருவருக்குப் பெரிய செல்வமாகும். அதுபோன்ற வேறொரு செல்வம் எங்கும் இல்லை.

காவேரி : என்னடா சொல்கிறாய் ?வீணாக எங்களைக் குழப்பாதே.

மதியழகன் : ‘வேண்டாமை’ என்பது, நமக்குத் தேவையில்லாத பொருள்களின் மேல்எல்லாம் ஆசைப்படக் கூடாது என்பதாகும். நமக்கு உடுத்துக் கொள்வதற்குச் சில உடைகளே போதும் நம்மிடம் நமக்குத் தேவையான பொருள் இருக்கும் போது, தேவையில்லாமல்

நிறையவேண்டுமென்று விரும்பக்கூடாது.. அதனால் நம்மிடம் இருக்கும் செல்வம் வீணாகும். உள்ளதே போதுமென்றிருந்தால் நம் செல்வம் பெருகும்.

அருள்மாறன் : 'விழுச் செல்வம்' என்பதற்கு என்ன பொருள்?

மதியழகன் : அழிவில்லாத செல்வம் என்று பொருள். பேராசிரியர் விளக்கிய போது. "தேவையில்லாத பொருள்களை வாங்கிக் குவித்தால் நம்மிடம் செல்வம் சேராது. அச்செயல் காலப் போக்கில் நம்மை ஏழையாக்கி விடும். வீண் ஆசை கொண்டு கண்டவற்றை எல்லாம் வாங்கி அடுக்கிக் கொண்டே வந்தால் செல்வம் படிப்படியாக அழிந்து வறுமை ஏற்பட்டுவிடும். ஆகவே,'வேண்டாமை' என்னும் நெறியைப்பற்றிவாழ முயல வேண்டும் என்றார்.

அருள்மாறன் : "யாண்டும் அஃது ஒப்பது இல்" இதற்கு என்ன பொருள் ?

மதியழகன் : உள்ளது போதும் ; அளவுக்குமேல் எதுவும் வேண்டா என்று தெளிவு கொள்வது ஓர் உயர்ந்த செல்வம் போன்றது ஆகும். அதற்குச் சமமான செல்வம் உலகில் எங்கும் இல்லை என்பது இதன் பொருள்.

சேக்கிழார் : நான் இந்தப்புத்தகத்தில் உள்ள விளக்கத்தையும் படிக்கிறேன்: "ஒரு பொருளின்மேல் விருப்பம் இல்லாமல்இருப்பது போன்ற சிறந்த செல்வம் இந்த உலகத்தில் இல்லை. அதற்கு ஒப்பான - அதாவது சமமான செல்வம் வேறு எங்கும் இல்லை".

அருள்மாறன் : தம்பி விளக்கிய இந்தக் குறளைக் கேட்டபின் , திருமணத்திற்கு வாங்கிய பட்டு வேட்டியைக் கட்ட

வேண்டுமென்னும் எண்ணமே எனக்குத்
தோன்றவில்லை.

சேக்கிழார் : மதியழகன் சொல்வதில் உயர்ந்த கருத்து
நிறைந்திருக்கிறது. நான் கூட.....

மல்லிகை : அண்ணனுக்குப் புதுச்சட்டை வேண்டா என்றால்
எனக்கும் வேண்டா.

காவேரி : (சற்றுக் கடுமையாக) இவன் ஏதோ உளறுகிறான்.
நீங்கள் எல்லாரும் அவன் சொல்வதைக் கேட்கப்
போகிறீர்களா? எனக்கும்தான் இருபது முப்பது பட்டுச்
சேலைகள் இருக்கின்றன. மகன் திருமணத்தில் நான்
புதிய பட்டுச் சேலை கட்டக்கூடாதா? உறவினர்களும்
பெண்வீட்டாரும் என்ன நினைப்பார்கள்? நம்மை
யாரும் தாழ்வாக எண்ண இடம் வைக்கலாமா?

மதியழகன் : நினைப்பவர்கள் நினைத்து விட்டுப் போகட்டும். நாம்
தகுதியானவர்களே. எனக்கு உள்ள சட்டைளே போதும்.
நீங்கள் புதிதாக வாங்கினாலும் நான் போட்டுக் கொள்ள
மாட்டேன்.

காவேரி : (கோபமாக) நீ எப்படியோ போ! திட்டமிட்டப்படியே
புதியதுணிமணிகள் வாங்கப்படும்;நம் தகுதியை
நிலைநாட்டும்படி மிகமிகச் சிறப்பாகத்திருமணம்
நடக்கும். சரி. வாருங்கள். சாப்பிடப் போகலாம்.

---- முற்றும் ---

# இடன் அறிதல்



--திருமதி தாமரை சீனிவாசராவ்

இந்த இதழின் பொறுப்பாசிரியர்.சிறந்த எழுத்தாளர்.பேச்சாளர். கம்போடியாவில் செயற்பட்டுவரும் ஆங்கோர்த் தமிழ்ச் சங்கத்தின் பொருளாளர்.

தகுந்த இடத்தைத் தேர்ந்தெடுத்துப் பகைவரை எதிர்கொண்டால் வெல்லமுயன்ற பகைவரும் தம் எண்ணத்தைக் கைவிடுவர். வெறும் ஆசையோ, அல்லது நோக்கமோ நமது வெற்றியை வரையறுப்பது இல்லை. மாறாக நாம் எடுக்கும் திறமையான முடிவுகளும், செயல்பாடும் நமது வெற்றிக்கு வழிவகுக்கும். நமது இலக்கு இதுவென்று முடிவுசெய்து ,தகுந்தநேரத்திற்கும் ,இடத்திற்கும் முதன்மை கொடுத்து இலக்கை நோக்கி முன்னேறுவதே நமது வெற்றியை உறுதிசெய்கிறது. பொறாமை, சூழ்ச்சி, வஞ்சகம், என, பலவித காரணிகள் நமது செயலை வரையறை செய்கின்றன. மானிடப்பிறவியில் இவை அனைத்தும் நமது வாழ்வியலோடு நம்முடன் பயணிப்பது இயல்புதான். ஆனால் இதைக் கண்டு நாம் சோர்வுகொள்ளாமல் ,மனம் உடையாமல் எதிர்கொண்டு வாழ்வில் வெற்றி பெறுவதிலேயே நமது திறன் உள்ளது. ஒரு தனிநபரையோ ,ஒரு கூட்டத்தையோ எப்படி இருந்தாலும், நமது அறிவுக் கூர்மையால் வீழ்த்தமுடியும். நாம் எடுக்கும் முடிவுகள் திறம்பட இருந்தால், செயலில் ஆக்கமும் இருந்தால் வீழ்ச்சி என்பதே இல்லை. நம்மை வீழ்த்தத் துணிந்தவர்களை எதிர்க்கும் ஆற்றல், தைரியம், வீரம் ஆகியவை நமது செயல்பாட்டை எளிமையாக்கும். பீரங்கிகள், துப்பாக்கிக்குண்டுகள் எனப் பல ஆயுதங்களை கொண்டு இருந்தாலும் நமது நாட்டின் மன்னர்கள் வெள்ளையனின் எப்பேர்ப்பட்ட படைகளையும் எதிர்க்கும் துணிச்சல் கொண்டிருந்தார்கள். வீரம் விளைந்த மண்ணாக விளங்குவோம், பிறருக்கு அடிமையாக ஒருகாலத்திலும் இருக்கமாட்டோம் என்று உரைத்து, உயிரினும் மேலாக மானத்தையும், வீரத்தையும் போற்றிவந்தார்கள். அவ்வரிசையில் வேலுநாச்சியார் கொண்டிருந்த வீரம் எதிரியின் படைகளையே அஞ்சச் செய்தது. அவர் போர்வியூகம், படைகளைத் திறம்பட முன்னிறுத்தி போருக்கு உருவாக்குதல், வழிநடத்துதல், சண்டையிடுதல், என பலநிலைகளையும் கொண்டிருந்தது. முதன்முதலாகத் தற்கொலைப் படை அமைத்து குயிலி என்ற வீரமங்கையின் உதவியால் வெள்ளைக்காரர்களின் ஆயுதக்கிடங்கையே அழித்து, போரிட்டு வெற்றிபெற்ற செய்தி, மிகப் பெருமைக்குரியதாகும். பல குறுநில மன்னர்கள் அவ்வாறே திறம்பட வெள்ளையர்களுக்குப் பணியாமல் எதிர்த்துவந்தனர்.

பனிபடர்ந்த மிகப் பெரிய பனிமலையில் இரவு, பகலாக நமது இராணுவவீரர்கள் பாதுகாத்துவருதல் அனைவரும் அறிந்ததே. சிரீநகரையும், லேநகரையும் இணைக்கும் தேசியநெடுஞ்சாலை கார்கில் வழியாகச்செல்கிறது.எனவே இந்தியா, பாகிசுத்தான் நாட்டைச் சேர்ந்த எல்லைப்படை பாதுகாப்புவீரர்கள் கண்காணித்துவருகிறார்கள். இதற்கிடையே கார்கில் வழியாக உள்ளே நுழைந்துவிட்டால் இந்தியாவைத் தாக்கலாம். காசுமீர் பிரச்சினைக்குத் தீர்வுகாணலாம் என்று பாகிசுத்தான் திட்டமிட்டது. பதட்டமான சூழ்நிலையில் இந்தியா-பாகிஸ்தான் இடையே 1999 ஆம் ஆண்டு இலாகூர் ஒப்பந்தம் கையெழுத்தானது. இதற்கிடையே பனிநிரம்பிய நேரத்தில் படைகள் கீழே இறங்கவேண்டும். ஆனால் பாகிசுத்தான் படைகள் அங்கேயே தங்கி பல இடங்களில் தனது முகாமை அமைத்துகொண்டது. பல இடங்களில் கண்ணிவெடிகளைப் புதைத்து பல நாசவேலைகளைச் செய்தனர்.



பின்னர் கேப்டன் சவுரப்காலியா என்பவரது தலைமையில் இந்தியப்படை போருக்குத் திட்டமிட்டு காசுமீர் பள்ளத்தாக்கிலிருந்து வீரர்களைத் திரட்டி, முன்னேறியது. முப்படைகளின் உதவியோடு, பல இழப்புகளைச் சந்தித்தும், பின்வாங்காமல் முன்னேறி, எதிரிகளை ஓடச்செய்தது. சிரீநகர்,இலடாக் இடையே தேசியநெடுஞ்சாலை மீட்பு, சாதாரணமாக நடந்துவிடவில்லை. ஆயுதக்கிடங்கு அழிப்பு, பலவீரர்களின் மரணம், சித்திரவதை செய்து கொல்லப்பட்ட வீரர்கள் எனப் பட்டியல் நீண்டது. எனினும் இந்திய இராணுவத்தினரின் திறமையான செயற்பாட்டால் எதிரிகளை வீழ்த்தமுடிந்தது.
இதைத்தான் வள்ளுவர் அழகாகக் கூறியுள்ளார். இவரை எதிர்க்கமுடியுமா என்ற சிந்தனையை எதிரிக்கு நாம் அளித்துவிட்டாலே அவன் பலவீனம் அடைந்துவிடுவான். அதைவிட தான் போட்ட தி ட்டத்தையும் அடியோடு மறந்து ஓடிவிடுவான். எனவே காலமறிந்து நாம்செய்யும் செயலானது உறுதியாக பகைவரையும் பின்வாங்கவைத்துவிடும் என்பது உண்மைதானே. இடமறிந்து திட்டங்கள் வகுத்து, வெற்றிகள் காண்போம்.
எண்ணியார்எண்ணம்இழப்பர்இடனறிந்து
துன்னியார்துன்னிச்செயின். (குறள்எண்: 494)



குறள் விளக்கக் கதை

# இப்படிச் சொல்லலாமா?

-----குருபரன்

சிங்கம்பட்டியில்  ஆலமரத்தடியில் அன்றைக்குப் பஞ்சாயத்து கூட்டப்பட்டிருந்தது.
கூடியிருந்த எல்லோர் முகத்திலும் கேள்விக்குறி.
 “என்ன வழக்கு? “

ஒருபுறம் பெரியவர் நல்லமுத்து சில முதியவர்களுடன் நின்றிருந்தார்.
இன்னொரு பக்கம்,பக்கிரிசாமி சில இளைஞர்களுடன்.

 “இரண்டு பேரும் பக்கத்துப் பக்கத்து வீடு ஆயிற்றே?“
 “பக்கிரிசாமி கொஞ்ச நாளாகக் கழுதை வளர்த்துவருகிறார்.
அது பெரியவர் வீட்டில் பூச்செடிகளை மிதித்துப் பாழாக்கிவிட்டது “
 “இதற்கெல்லாமா வழக்கு? “
இப்படிப் பல உரையாடல்கள் அங்கே.

இதற்குள் பஞ்சாயத்துத் தலைவர் வந்துவிட்டார்.
 “பெரியவரே!என்ன வழக்கு? “
 “ஐயா!இந்தப் பக்கிரிசாமி என் பக்கத்து வீட்டுக்காரர்.
தம் வீட்டுக்கு வெளியே வந்துநின்று
என் வீட்டைப் பார்த்து ஏய்! கழுதை!என்று கூப்பிடுகிறார்.
இவர் கழுதை வளர்த்துவருகிறார் என்பது உண்மைதான்.
ஆனால் நான் வெளியே வரும் வேளையில் மட்டுமே அப்படிக் கூப்பிடுகிறார். “
இதுதான் பெரியவர் குற்றச்சாற்று.



தலைவர் தொண்டையைக் கனைத்துக் கொண்டார்.

"பக்கிரிசாமி! பெரியவர் சொல்வது போல்
அவரைப் பார்த்துக் கழுதை என்று கூப்பிட்டால் அது மிகவும் பிழை.
என்ன சொல்கிறாய்?? "

பக்கிரிசாமி சுற்றுமுற்றும் பார்த்தான்..
"அவ்வாறு கூப்பிட்டால் தவறுதான்.
நான் என் கழுதையைப் பார்த்துத் தான்
அங்ஙனம் அழைத்தேன்.
பெரியவரைப் பார்த்துக் கூப்பிட்டதைப் போல் சூழ்நிலை அமைந்துவிட்டது.
என்னை மன்னித்துவிடுங்கள்." மிகவும் தணிவான குரலில் பேசினார் பக்கிரிசாமி.

"உன் இரண்டு கைகளையும் கூப்பி பெரியவரைப் பார்த்து வணங்கி மன்னிப்புக் கேட்டுக்கொள் " கண்டிப்பான குரலில் தலைவர் பேசினார்.

அவ்வாறே பெரியவரைப் பார்த்து வணங்கி மன்னிப்புக் கேட்டுக்கொண்டார் பக்கிரிசாமி.

"ஐயா!எனக்கு ஒரு தெளிவு தேவை." பக்கிரிசாமி இப்போது தலைவரைப் பார்த்துப் பேசினார்.
"ம்..ம்..கேளுங்கள் பக்கிரிசாமி... "காதைத் தீட்டிக்கொண்டார் தலைவர்.
"ஒன்றுமில்லை ஐயா.அவ்வப்போது பெரியவர் அவர்கள் இருக்கும்வேளையில் நான் கழுதையே என்று அழைக்கும் சூழ்நிலை ஏற்பட்டுவிட்டது பெரியவர் மனம் வருந்தும்படி நடந்தது என அறிந்தேன்.ஊர்ப் பஞ்சாயத்துமுன் மன்னிப்பும் கேட்டுக்கொண்டேன்.இதேபோல் என் செல்லக்கழுதை முன்னிலையில் பெரியவரே என அழைக்கும்படி ஏற்பட்டால் அது தவறா? "
தலைவர் சற்றும் தயங்காமல் கூறினார்.
"பெரியவரைப் பார்த்து நீ கூறினால் அது அவமரியாதை.
ஆனால் உன் கழுதையைப் பார்த்து என்ன கூறினாலும்
அது உன் விருப்பம்.அதனை இந்தப் பஞ்சாயத்து எப்படிக்
குற்றம் எனக் கூறமுடியும்? "

“சரிங்க ஐயா மிக்க நன்றி.“ எனக் கூறிய பக்கிரிசாமி

பஞ்சாயத்துக்குத் தான் அழைத்துவந்த செல்லக் கழுதையைப் பார்த்து

இவ்வாறு கூறினான்.

“பெரியவரே! நாம் வீட்டுக்குப் போகலாம். “

அன்றுமுதல் நாள்தோறும் தன் செல்லக்கழுதையைப் பார்த்துப் பக்கிரிசாமி

“பெரியவரே “என்றுதான் அழைத்துவந்தான்.

எந்தப் பஞ்சாயத்துக்கும் யாரும் போகவில்லை.

நிறையப் பேர் நிறையக் கழுதைகளைப்

பெரியவர்கள் என்றுதான் அழைத்துவருகிறார்கள்.

யாரும் இதற்காகச் சண்டைக்கும் வருவதுமில்லை.

பஞ்சாயத்துக்கும் போவதில்லை.

நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்

பயனில சொல்லாமை நன்று.(குறள்-197.)

கற்க கசடற க் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.



# குறள் விருந்து



தி.வ.ஆ.-2053 பங்குனி- 10 பொ.ஆ.-2022 மார்ச்சு-24

திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ்

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்









குறளைக் கற்போம் குழந்தைகளே

குன்றெனப் புகழைக் குவிப்போமே

பிஞ்சு வயதினில் கற்றிடும் குறளால்

நெஞ்சில் நன்னெறி விதைப்போமே

சிறுவர்கள் பயிலும் குறள்நெறியால்

பெருமைகள் பலவும் சேர்ப்போமே

வள்ளுவர் தந்த வான்மறையால்

வாழ்வில் சிறப்புடன் உயர்வோமே

நாடும் வீடும் நலம் பெறவே

நாளும் குறளைக் கற்போமே

கசடறக் கற்றுத் தெளிவோமே

கற்றபின் அதன்வழி நிற்போமே

வல்லரசாய் நாட்டை வளர்ப்போமே

வல்லமை பெற்றிட உழைப்போமே

சிறப்பாசிரியர்: முனைவர் முரசு நெடுமாறன் பொறுப்பாசிரியர்: திருமதி.தாமரை சீனிவாச ராவ்

ஆசிரியர்:மறைமலை இலக்குவனார் இணை ஆசிரியர்: தி.ஈழக்கதிர்

# பெற்றோர் எங்கே?



**----முரசு நெடுமாறன்**

**இந்த நாடகத்தை இயற்றி வழங்கியவர் "மலேசியாவின் அழ.வள்ளியப்பா "என்று பாராட்டப்படும் மலேசியப் பாவலர் முனைவர் முரசு நெடுமாறன் ஆவார்.மலேசியத் தொலைக்காட்சியிலும் வானொலியிலும் ஆயிரக்கணக்காகக் குழந்தைப் பாடல்களும் நாடகங்களும் படைத்து வழங்கிய வரலாற்றுச்சாதனையாளர் இவரே.. "மலேசியக் கவிதைக்களஞ்சியம் என்னும் இவரது தொகுப்பு நூல் மலேசியாவில் இருநூறாண்டுகளாக வளர்ந்துவரும் தமிழ்க்கவிதையின் வரலாற்றைக் கூறுவது.தமது கவிதைப் பணிக்காகத் தமிழக அரசால் பாரதிதாசன் விருது வழங்கிச் சிறப்பிக்கப்பட்ட முதல் அயல்நாட்டவர்.)**

காட்சி 1

இடம் : பள்ளியின் நுழை வாயில்

கதைமாந்தர் : புகழேந்தி, வள்ளியப்பன், தாமரை (புகழேந்தியின் பெற்றோர்)

நேரம் : நண்பகல்

நிலை : பள்ளியில் நடந்த சிறப்பு வகுப்பில் கலந்து கொண்ட புகழேந்தி வகுப்பு முடிந்து வெளியே வருதல். அங்குக் காரில் காத்திருந்த பெற்றோருடன் இல்லம் திரும்புதல்.

தாமரை : என்ன புகழேந்தி? சிறப்பு வகுப்பில் என்ன நடந்தது?

புகழேந்தி : புலவர் ஒருவர் திருக்குறள் பற்றி, எங்களுக்கு விளங்குவதுபோல் அருமையான சொற்பொழிவு ஆற்றினார்.

வள்ளியப்பன் : என்ன பொருள் பற்றிப் பேசினார்?

புகழேந்தி : திருக்குறளின் ஏழாம் அதிகாரம் பற்றி மிக அருமையாகப் பேசினார். ஆசிரியர்களும் மாணவர்களாகிய நாங்களும் பெருமகிழ்ச்சி அடைந்தோம்.

தாமரை : திருக்குறளில் ஏராளமான கருத்துகள் கொட்டிக் கிடக்கின்றன. எந்தக் கருத்துப் பற்றிப் புலவர் சிறப்பாக எடுத்துரைத்தார்?

புகழேந்தி : இந்தக் காலத்தில் இளைஞர்கள் தங்களைப் பெற்று வளர்த்து ஆளாக்கிய பெற்றோரைச் சரியாகக் கவனிப்பதில்லை; அவர்களுக்கு உரியனவற்றைச் செய்வதில்லை என்று கூறி வருந்தினார்.

வள்ளியப்பன் : வருந்தியதொடு நின்றுவிட்டாரா?

புகழேந்தி : இல்லை,இல்லை.திருக்குறளில் திருவள்ளுவர் சொல்லியுள்ள அற நெறிகளை எடுத்துத் தெளிவாக விளக்கினார். ஏழாம் அதிகாரமான மக்கட்பேறு பற்றி மிகமிகத் தெளிவாக எடுத்துரைத்தார்.

தாமரை : புலவர் சொன்ன அறநெறி பற்றிக் கொஞ்சம் எடுத்துச் சொல் புகழேந்தி?

புகழேந்தி : பெற்றோர் தம் பிள்ளைகளின் மழலைமொழி, புல்லாங்குழல் எழுப்பும் இனிய இசையைவிடச் சிறப்பானது என்று மகிழ்வார்கள். தம் குழந்தையை மற்றவர்கள் பாராட்டும் போது, அக் குழந்தையை பெற்றெடுத்த போது அடைந்த மகிழ்ச்சியைவிடக் கூடுதலாக மகிழ்வார்கள்.

தாமரை : உண்மைதான்.

வளியப்பன் : படிப்பில் கெட்டிக்காரனான உன்னை, மற்றவர்கள் பாராட்டும் பொழுது நாங்கள் அடையும் மகிழ்ச்சிக்கு அளவுண்டோ?

தாமரை : சரி பெற்றோர் பிள்ளைகளுக்குச் செய்ய வேண்டிய கடமைகள் பற்றிச் சொன்ன திருவள்ளுவர், பிள்ளைகள் பெற்றோர்க்குச் செய்ய வேண்டிய உதவிபற்றி என்ன என்று புலவர் விளக்கினார்தானே.

புகழேந்தி : ஆம். தம் சொற்பொழிவில் புலவர், அது பற்றித்தான் மிக அதிகமாக எடுத்துச் சொன்னார்.

வள்ளியப்பன் : எங்கே, அவர் என்ன கூறினார் என்பதைக் கொஞ்சம் சொல்கிறாயா?

புகழேந்தி : முடிந்தவரை சொல்கிறேன். முதலில் குறளைச் சொல்கிறேன்.
" மகன் தந்தைக்கு ஆற்றும்உதவி இவன்தந்தை
என்நோற்றான் கொல் எனும்சொல் " (70)

தாமரை : இந்தக் குறளின் பொருளைச் சற்று விளக்குகிறாயா?

புகழேந்தி : இந்தக் குறளில் மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி என்பது பற்றிப் புலவரிடம் கேட்டேன். "திருவள்ளுவர் மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி பற்றி மட்டும்தானே சொல்கிறார். தாயைப் பற்றிக் குறிப்பிடவில்லையே" என்றேன்.

வள்ளியப்பன் : அதற்குப் புலவர் என்ன சொன்னார்?

புகழேந்தி : "தந்தை பற்றிக் குறிப்பிடும் போது அதில் தாயும் அடங்குவார்; தாயைப்பற்றிக் குறிப்பிடும் போது தந்தையும் அடங்குவார்" என்றார்.

தாய் : சரி குறளில் திருவள்ளுவர் என்னதான் கூறுகிறார்?

புகழேந்தி : மகன் தந்தைக்குச் செய்ய வேண்டிய உதவிகள் என்ன என்பதை அவர் பட்டியல் போட்டுச் சொல்லவில்லை. மிக மிகச் சுருக்கமாகக் கூறுகிறார்.

வள்ளியப்பன் : சரி. என்னதான் சொல்கிறார்?

புகழேந்தி : ஒருவன்,தன் தந்தைக்கும் தாய்க்கும் செய்ய வேண்டிய உதவி என்னவென்றால், இந்தப் பையனின் தந்தை இவனை மகனாகப் பெறுவதற்கு என்னதவம் செய்தாரோ என்று பிறர் புகழும்படி நடந்தது கொள்வதாகும்.

வள்ளியப்பன் : குறளை நீ நன்றாகப் புரிந்து கொண்டிருக்கிறாய். தவம் என்பதற்குப் பல பொருள் உண்டு. இங்கே மகனைக் கல்வியிலும் ஒழுக்கத்திலும் சிறந்தவனாக்கத் தந்தை மேற்கொண்ட கடுமையான விடா முயற்சிகளைக் குறிக்கும்.

புகழேந்தி : மக்களால் நல்லவன் என்று பெயர் வாங்க வேண்டுமானால், அவன் செய்ய வேண்டிய அனைத்துக் கடமைகளையும் சரியாகச் செய்யவேண்டும். அவற்றுள் மிக முக்கியமானது, வளர்த்து ஆளாக்கிய பெற்றோர்க்கு வேண்டிய அனைத்து உதவிகளையும் செய்ய வேண்டும். அது முதல் கடமையும் கூட.

தாமரை : புகழேந்தி,நாங்கள் பெருமை கொள்ளும் அளவு நீ நடந்து வருகிறாய்.

புகழேந்தி : அப்பாவும் நீங்களும் தாத்தா பாட்டிகளை எப்படி கவனித்துக் கொள்கிறீர்கள். அதைப்பார்க்கும் நானும் அப்படி ஆக நினைக்கிறேன்.

வள்ளியப்பன் : புகழேந்தி, உன்னை மகனாகப் பெற்றதில் நாங்கள் அடையும் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

தாமரை : உங்கள் நண்பர் வெற்றிவேல்,நம் புகழேந்தியை தம்

வீட்டிற்கு வருமாறு அழைத்ததாகச் சொன்னீர்களே.

வள்ளியப்பன் : ஆம். நாளை மறுநாள் அவருக்கு விடுமுறை நாள். புகழேந்தியை நான் கொண்டுபோய்விட்டு வருவேன்.

-காட்சி முடிவு-

காட்சி 2

இடம் : வெற்றிவேல் இல்லத்தின் ஒரு பகுதி

கதைமாந்தர் : வெற்றிவேல், அவர் மனைவி செண்பகம், புகழேந்தி

நேரம் : காலை

நிலை : தம் தந்தையின் காரில் வந்து இறங்கிய புகழேந்தியை வெற்றிவேலும் அவர் மனைவியும் அழைத்துச் சென்று வீட்டினுள் அமரச் செய்தல் சிற்றுண்டி அளித்தபின் பேசத் தொடங்குதல்.

வெற்றிவேல் : புகழேந்தி, நீ எங்கள் வீட்டிற்கு வந்தது எங்களுக்கு பெருமகிழ்ச்சி. உன்னை அழைத்து வரும்படி உன் அப்பாவிடம் பலமுறை சொன்னேன்.

செண்பகம் : இன்றாவது உன்னை அழைத்து வந்தாரே. முதலில் அவருக்கு நன்றி கூற வேண்டும்.

புகழேந்தி : என்னை அழைத்தற்கு உங்களுக்குத்தான் நன்றி கூறவேண்டும்.

வெற்றிவேல் : நீ படிப்பில் கெட்டிக்காரன். திருக்குறளையும் ஆழ்ந்து படித்து வருகிறாய் என்று உன் அப்பா சொன்னார். அதனால் உன்னை அழைத்துப் பாராட்ட வேண்டுமென்று நினைத்தோம்.

புகழேந்தி : ஆசிரியர் தந்த ஊக்கம்தான் நான் திருக்குறளை ஆர்வத்தோடு படித்து வருவதற்குக் காரணம்.

செண்பகம் : சரி, நீங்கள் பேசிகொண்டிருங்கள் நான் பகல் உணக்கு ஏற்பாடு செய்துவிட்டு வருவேன்.

புகழேந்தி : சரி அத்தை. எனக்காகச் சிறப்பாக ஏதும் உணவு தயாரிக்க வேண்டா. நீங்கள் இயல்பாக உண்ணும் உணவே எனக்குப் போதும்.

வெற்றிவேல் : புகழேந்தி நீ எங்கள் சிறப்பு விருந்தினர். அதற்கேற்ப நாங்கள் உன்னை நடத்தவேண்டும் அல்லவா?

புகழேந்தி : நான் அளவோடு எளிய உணவுதான் உண்பேன் மாமா. அதுவும் உடலுக்குப் பொருந்தும் உணவுதான் உண்பேன்.

வெற்றிவேல் : தெரியும். உன் அப்பா எல்லாம் சொல்லியிருக்கிறார். நீ நேற்றும் உன் வீட்டில் ஒரு திருக்குறள் பற்றி விளக்கிச் சொல்லிக் கொண்டிருந்தாயாமே!

புகழேந்தி : ஆமாம் மாமா. அது ஓர் அருமையான குறள். ஒவ்வொருவரும் படித்துப் புரிந்து கொள்வதோடு. அதன்படி நடக்க முயற்சி செய்ய வேண்டும்.

வெற்றிவேல் : எனக்கு ஓரளவு தமிழ் தெரியும். திருக்குறள் பற்றிக் கேள்விபட்டிருக்கிறேன்.

புகழேந்தி : உங்களுக்குத் திருக்குறள் பற்றித் தெரிந்ததிருக்கிறதே. அதுவே எனக்கு மகிழ்ச்சிதான்.

வெற்றிவேல் : சரி, புகழேந்தி. அந்தக் குறளைக் கொஞ்சம் விளக்குகிறாயா?

புகழேந்தி : சரி மாமா. எனக்குத் தெரிந்தவரை விளக்குகிறேன். கேளுங்கள்.

“ மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை
என்நோற்றான் கொல்எனும் சொல் ”

வெற்றிவேல் : பெற்றோர் தம் பிள்ளையை வளர்க்கப்படாத பாடு படுகிறார்கள்; கல்வி கற்க வைக்கிறார்கள். நல்லொழுக்கங்களைக் கற்பித்து உயர்ந்த மனிதனாக வாழவைக்கிறார்கள். அவர்களுக்கு மகன் என்ன செய்ய வேண்டும்?

வெற்றிவேல் : ம் .............. சொல் புகழேந்தி.

புகழேந்தி : இவ்வளவு சிறந்த பிள்ளையைப் பெறுவதற்கு இவன் தந்தை என்ன தவம் செய்தானோ என்று மற்றவர்கள் சொல்லும்படி
மகன் நடந்து கொள்ள வேண்டுமென்பது இந்தத் திருக்குறளின் பொருள்.

வெற்றிவேல் : ( தனிமொழி - தனக்குள்) நம் பெற்றோரை முதியோர் காப்பகத்தில் விட்டிருக்கிறோமே இவனுக்குத் தெரிந்தால் நம்மை என்ன நினைப்பான்?

புகழேந்தி : என்ன மாமா. ஏன் அமைதியாகிவிட்டீர்கள்?

வெற்றிவேல் : ( தடுமாற்றத்துடன்) ம்........ஒன்றுமில்லை.

புகழேந்தி : என் பாட்டியையும் தாத்தாவையும் என் பெற்றோர் கவனமாகப் பாதுகாத்து வருகின்றனர். நான் அவர்களிடம் நிறைய கற்றுக் கொள்கிறேன். அவர்கள் அனுபவத்தை யெல்லாம் சொல்லி என்னை வழி நடத்துகிறார்கள்.

செண்பகம் : உணவு தயாராகிவிட்டது. புகழேந்தியை அழைத்து வாருங்கள்.

புகழேந்தி : சாப்பாட்டுக்கு என்ன அவசரம்? கொஞ்ச நேரத்திற்கு முன்பு தானே பசியாறினோம்.

வெற்றிவேல் : ம்............ சரி. கொஞ்ச நேரம் பொறுத்தே உணவு உண்ணலாம்.

புகழேந்தி : மாமா ஒன்று கேட்கிறேன். தப்பாக எண்ண மாட்டீர்களே!

வெற்றிவேல் : ம்.......... கேள். தப்பாக எதுவும் நினைக்க மாட்டேன்.

புகழேந்தி : எனக்குத் தாத்தா பாட்டிகள் என்றால் மிகவும் பிடிக்கும். வீட்டில் உங்கள் பெற்றோர் இருப்பார்கள் அவர்களிடம் கொஞ்சம் பேசிப் பழகலாம் என்று நினைத்தேன்.

வெற்றிவேல் : ( யாரோ தன் கன்னத்தில் அறைந்ததுபோல் உணர்ந்த வெற்றிவேல் தடுமாற்றத்துடன்.......)
அவர்கள் இப்போது இங்கில்லை.வேறோர் இடத்தில் இருக்கிறார்கள்.

புகழேந்தி : மன்னித்துவிடுங்கள் மாமா. உங்களையும் அத்தையையும். பார்த்ததே எனக்கு மகிழ்ச்சி. உங்களுடன் விருந்துண்பது அதைவிட மகிழ்ச்சி.

வெற்றிவேல் : ( குழம்பிய நிலையில் தனக்குத்தானே நினைக்கிறார்)
நமக்கு எவ்வளவோவசதி இருக்கிறது. பெற்றோரை வீட்டில் வைத்துப் பராமரிக்க முடியும். ஒரு சிறு பையன் நம்மை இந்தப் பாடுபடுத்திவிட்டானே. நம்முடிவை மறு பரிசீலனை செய்ய வேண்டும்.... (இப்படி எண்ணிக் கொண்டே)
சரி புகழேந்தி அத்தை நமக்காக காத்திருக்கிறார்கள். உணவு உண்ணச் செல்வோம் வா.

புகழேந்தி : சரி மாமா செல்வோம்.

முற்றும்.

# இனியவை கூறல்



--திருமதி தாமரை சீனிவாசராவ்

கம்போடியா-ஆங்கோர் தமிழ்ச் சங்கப் பொருளாளர். புதுச்சேரியில் பல சமூக அமைப்புகளில் பொறுப்பு வகித்துப் பொதுப்பணியாற்றிவருகிறார்.பல்வேறு தமிழ் அமைப்புகளுடன் இணைந்து தமிழ்ப்பணியாற்றி வருகிறார்.முற்போக்கு எழுத்தாளர்.முன்னணிப் பாவலர். நம் இதழின் பொறுப்பாசிரியர்.

"அகத்தின் அழகு முகத்திலே" என்பது போல், நமது உள்ளத்து அழகே வெளியில் தெரியும். ஆயினும் சிலர் உள்ளுக்குள் பல சோகங்களைத் தன்னில் வைத்திருந்தாலும்,பிறர்பால் அதைக் காட்டிக் கொள்ள மாட்டார்கள். தம்முடைய சோர்வோ,சோகமோ பிறரைக் காயப்படுத்தி விடக்கூடாது என்பதில் கவனமாக இருப்பார்கள்.அப்படிப்பட்ட உயரிய குணமுடையோரை எதிரியும் கண்டு வணங்குவார்கள்.இன்று வேகமாக ஓடும் காலக்கட்டத்தில் விஞ்ஞான வளர்ச்சி,பொருளாதார வளர்ச்சி போன்றவை அதிகரித்து வரும் அதே வேளையில், மனிதருடைய முகம் பார்த்து பேசும் வழக்கமோ,ஆறுதலான வார்த்தைகளைப் பரிமாரிக் கொள்வதோ அருகி வருவதைக் கண்கூடாகப் பார்க்கிறோம். முதியோருக்கு,முதியோர் இல்லம்,குழந்தைகளுக்கு ஆறு மாதம் முதல் "க்ரெசு" என்னும் சிறு கூடத்தில் தொடங்கி,பெற்றோருக்கு அலுவலகம் என்னும் அறையில் அடங்கி ,தொடரும் இந்த பரபரப்பு வாழ்க்கை நமது

நிலைமையைக் காட்டுகிறது. ஆறுதலான வார்த்தைக்கு கூட நமது அன்பானவர்களிடமிருந்து பெற வழி இல்லாத ஓட்டத்தை எடுத்துச் சொல்கிறது.இன்று மனநல ஆலோசகர்கள்,சிறிது நேரமாவது, குழந்தைகளிடம் பேசுங்கள், பெரியோரை கவனியுங்கள்,உங்களுக்காக சிறிது நேரம் ஒதுக்குங்கள் என்று அவர்கள் அறிவுரை சொல்லும் நிலைமையில் நாம் இருக்கும் போது, எங்கு வெளியில் நேரம் செலவிடுவது?ஆனால் வள்ளுவர் உரைப்பது அதுவல்ல.இவ்வளவு பரபரப்பு நிறைந்த வாழ்க்கையிலும்,நாம் செய்யும் சிறு புன்னகையால்,நமக்கும் மனமகிழ்வு கிடைக்கும், பிறரும் மகிழ்வர்.பொருளுதவி செய்ய இயலாத வறுமையாக இருந்தாலும் , பிறரிடம் இன்சொல் பேசி தனது ,அன்பான ஆதரவை தெரிவித்தாலே அனைவருமே மகிழ்வார்கள் .நமது நேயத்தை அன்பால் வெளிப்படுத்தினாலே போதுமானது. வார விடுமுறை நாட்களில் பிள்ளைகளோடு,பொழுதுப் போக்கு இடங்களுக்குச் செல்வதையே வழக்கமாகக் கொண்டிராமல்,நல்ல மனிதர்களிடம் பழக,பெரியோரிடம் பேசி விளையாட,சிறுவர் இல்லங்களுக்கு அழைத்துச் சென்று அவர்களோடு சிறிது நேரம் பேசி அவர்களை மனமகிழச் செய்யலாம்.இது குழந்தைகள் வளர்ச்சிக்கு மிகப்பெரும் உதவியாக இருக்கும். ஒரு நல்ல சமதர்ம,முற்போக்குச் சமுதாயமாக மாற இப்பண்புகள் உதவி புரியும். பொருளால் உதவி செய்வதை விட நாம் இன்முகத்தோடு அவர்களுக்குத் தரும் ஆறுதல் வார்த்தைகள் பல கோடி பலன் தரும்.

நமது மகாகவியின் வாழ்க்கைப் பயணமோ மிகவும் கரடுமுரடானது. வறுமையும்,துன்பமும் அவரைத் துரத்திய போதும்,பல அவமானங்களைக் கடந்து வந்த போதும் தன்னுடைய இன்முகம் காட்ட

மறந்ததில்லை.காக்கை,குருவி தொடங்கி அனைத்து உயிர்களிடத்தும் அன்பைச் செலுத்தினார்.தன் பிள்ளைகளுக்கு உணவில்லாத போதும், உழைக்கும் மக்களுக்குத் தன்னிடம் இருந்ததைப் பகிர்ந்து கொடுத்து அவர்கள் முகத்தில் மலர்ச்சியைக் கண்டார்.கருணைத் தாய் அன்னைத் தெரசா,தன்னிடம் பொருள் வசதி ஏதுமில்லாக் காலத்திலும்,தன்னிடம் வந்த நோயாளிகளை அரவணைத்து, இன்முகத்தோடு அவர்களிடம் கருணை காட்டினார். நோயைக் குணப்படுத்தினார்.தன்னை இகழ்ந்தோரையும் புன்னகையால் கவர்ந்து,ஏழைகளுக்காகப் பெரும் செல்வந்தர்களிடம்,கையேந்தி உதவிகளைப் பெற்றுத் தொண்டு செய்தார். அவரின் புன்னகை தான் அதிகாரம் செய்து மிரட்டியவரையும் பணிய வைத்தது. ஏழைகளிடம் மனமிரங்கச் செய்தது.

முன்னாள் குடியரசுத் தலைவர் திரு. அப்துல் கலாம் அவர்களின் மழலை மாறாத அந்தப் புன்னகை தான்;தான் ஒரு ஏவுகணை நாயகன்,சிறந்த அறிவாளி என்பதையும் தாண்டி,குழந்தைகள் முதல் பெரியோர் வரை அனைவரின் மனத்திலும் நீங்கா இடம் பிடிக்கச் செய்தது.யாரிடமும் எளிமையாகவும்,பணிவாகவும் நடக்கும் பண்பு,அவரை சிறந்த பண்பாளராகக் காட்டியது.யாரிடமும் கோபப்படாமல் சிரித்த முகத்துடன் பதில் தருவது.குழந்தைகள் கேட்டால் கூட மிகவும் சாதாரணமாக, மழலையாகவே மாறி அவர்களுக்கு விளக்கமளிப்பது ஆகிய பண்புகள் அவரைத் தனித்துக் காட்டியது.

புன்னகையே மிகச்சிறந்த மருந்து.நோயினால் அவதியடைவோரும் வெறும் பணத்தால் செலவு செய்து நோய்கள் குணமாக்கப் படுவதில்லை.மலர்ந்த முகத்தோடு மருத்துவர்,செவிலியர் தரும் நம்பிக்கைகள் அவர்களப் பாதி குணமடைய வைத்துவிடும்.கோபத்தால்

கெடும் பல காரியங்களை, புன்னகையால் வென்று விடலாம்.வாய்விட்டு சிரியுங்கள் என்று நமக்கு வகுப்புகள் நடத்தப்படும் காலமும் வந்துவிட்டது. ஆனால் வகுப்பில் சென்று தான் புன்னகைக்க வேண்டும் என்பதில்லை. அக்கம் பக்கத்தினரிடம் நாம் காட்டும் புன்னகையின் தொடக்கமே,நல்ல தொடக்கமாய் இருக்கும். புன்னகையோடு இன்சொல் கூறுபவர்களை எல்லோருக்கும் பிடிக்கும். அந்த இன்சொல் கூறுதலே இன்றைய சூழலில் வாழ்த்தாக வெளிப்படுகிறது. புன்னகை கலந்த இனிய சொற்களே பூமியை வழிநடத்தும்.

எதிர்மறைகளைத் தவிர்த்து நம்பிக்கையோடு ,நேர்மறைச் சிந்தனையோடு, அன்பை வெளிப்படுத்துவோம்.பொருளதவி இயன்றோர் செய்யட்டும். இயன்ற உதவியாக, இயல்பிலே நம்மிலே கொட்டிக் கிடக்கும் புன்னகையை பிறருக்கு அள்ளித் தருவோம்.அன்பை விதைத்து, மனிதத்தை அறுவடை செய்வோம்.

***அகனமர்ந்து ஈதலின் நன்றே முகனமர்ந்து***

***இன்சொலன் ஆகப் பெறின்.* குறள் எண்: 92**

முகம் மலர்ந்து இனிய சொற்களை ஆறுதலோடு பேசுவது அகம் மலர்ந்து ஒன்றைக் கொடுப்பதைவிட இனிமையானதாகும். முகமலர்ச்சியோடு பேசுபவர்களை எல்லோருமே விரும்புவார்கள். நம்முடைய நற்குணங்களின் வெளிப்பாடாக நாம் நம் தோற்றத்திலேயே ஒருவரைக் கண்டு கொள்ள முடியும்

கற்க கசடற க் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.



# குறள் விருந்து




தி.வ.ஆ.-2053 சித்திரை- 11 பொ.ஆ.-2022 ஏப்பிரல்-24

திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ்

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்









குறளைக் கற்போம் குழந்தைகளே

குன்றெனப் புகழைக் குவிப்போமே

பிஞ்சு வயதினில் கற்றிடும் குறளால்

நெஞ்சில் நன்னெறி விதைப்போமே

சிறுவர்கள் பயிலும் குறள்நெறியால்

பெருமைகள் பலவும் சேர்ப்போமே

வள்ளுவர் தந்த வான்மறையால்

வாழ்வில் சிறப்புடன் உயர்வோமே

நாடும் வீடும் நலம் பெறவே

நாளும் குறளைக் கற்போமே

கசடறக் கற்றுத் தெளிவோமே

கற்றபின் அதன்வழி நிற்போமே

வல்லரசாய் நாட்டை வளர்ப்போமே

வல்லமை பெற்றிட உழைப்போமே

சிறப்பாசிரியர்: முனைவர் முரசு நெடுமாறன் பொறுப்பாசிரியர்: திருமதி.தாமரை சீனிவாச ராவ்

ஆசிரியர்:மறைமலை இலக்குவனார் இணை ஆசிரியர்: தி.ஈழக்கதிர்

# விருந்தினர் முகம்



----முரசு நெடுமாறன்

இந்த நாடகத்தை இயற்றி வழங்கியவர் "மலேசியாவின் அழ.வள்ளியப்பா "என்று பாராட்டப்படும் மலேசியப் பாவலர் முனைவர் முரசு நெடுமாறன் ஆவார்.மலேசியத் தொலைக்காட்சியிலும் வானொலியிலும் ஆயிரக்கணக்காகக் குழந்தைப் பாடல்களும் நாடகங்களும் படைத்து வழங்கிய வரலாற்றுச்சாதனையாளர் இவரே.. "மலேசியக் கவிதைக்களஞ்சியம் என்னும் இவரது தொகுப்பு நூல் மலேசியாவில் இருநூறாண்டுகளாக வளர்ந்துவரும் தமிழ்க்கவிதையின் வரலாற்றைக் கூறுவது.தமது கவிதைப் பணிக்காகத் தமிழக அரசால் பாரதிதாசன் விருது வழங்கிச் சிறப்பிக்கப்பட்ட முதல் அயல்நாட்டவர்.)

<u>காட்சி 1</u>

**இடம் : பெரிய சோலையின் ஒரு பகுதி**

கதைமாந்தர் : அழகன் (தம்பி), கலைவாணி(அக்காள்), முனியப்பன் (மாமா), புகழினி (தங்கை).

நேரம் : பிற்பகல்

நிலை : சுற்றுலாச் சென்றோர் உணவருந்துதல், அங்கிருந்த ஏழைச் சிறுவனுக்கு உணவு கொடுக்கத் தவறுதல்.

முனியப்பன் : பாருங்கள் இது ஓர் அழகான பூங்கா. இந்தப் பகுதியிலே இதுதான் மிகப் பெரிய பூங்கா.

கலைவாணி : எல்லாரும் இங்கே உட்காருவோம். அழகன், தண்ணீர்ப் புட்டிகளை எடுத்து ஆளுக்கு ஒன்றாகக் கொடு. புகழினி, தட்டுகளை எடுத்துவை.

அழகன் : அக்கா , அங்கே பாருங்கள். ஒரு சிறுவன் சோர்ந்துபோய் உட்கார்ந்து கொண்டிருக்கிறான்.

புகழினி : பாவம் அவனுக்குப் பசிபோல் இருக்கிறது.

முனியப்பன் : அவன் கிடக்கிறான் அநாதைப்பயல்; நாம் சாப்பிடுவோம்.

அழகன் : பக்கத்திலே ஒரு பையன் பசியால் வாடிக் கொண்டிருக்கும்போது நாம் மட்டும்சாப்பிடுவது நல்லதா?

முனியப்பன் : இவர் பெரிய வள்ளல். இவர் பசியை விட மற்றவர் பசியைப் பற்றிக் கவலைப் படுகிறார்.

புகழினி : அண்ணன் நினைப்பதில் தவறு இல்லையே மாமா.

முனியப்பன் : அண்ணன் பெரிய வள்ளல், தங்கை குட்டி வள்ளல்.

கலைவாணி : இரண்டு பேரும் சொல்வதில் தப்பில்லை மாமா.
திருவள்ளுவர்.....

முனியப்பன் : இவங்களுக்கு எப்போதும் திருவள்ளுவர் நினைப்புத்தான்.
அக்காவைப் போலவே உடன் பிறந்தவர்களும்.

கலைவாணி : வம்பு வழக்கு வேண்டா. ஒரு தட்டிலே கொஞ்சம் உணவு
எடுத்து வைக்கிறேன். உணவுத்தட்டை....

அழகன் : நல்லது. உணவுத்தட்டை என்னிடம் கொடுங்கள் நான்
கொண்டு போய்க் கொடுத்துவிட்டு வருவேன்.

முனியப்பன் : வேண்டா. வேண்டா. அந்தத் தட்டை என்னிடம்
கொடுங்கள். அந்தக் கழுதைக்கு நான் கொண்டு போய்க்
கொடுப்பேன். (கலைவாணி உணவுத் தட்டைக்
கொடுத்தல்).

கலைவாணி : ஏன் இப்படி ஆத்திரப்படுகிறீர்கள் மாமா. நாம் எதையும்
அன்போடுதர வேண்டும்.

முனியப்பன் : கொடுப்பது பிச்சை. இதில் என்ன அன்பு? கொடுப்பதைச்
சாப்பிட வேண்டியது தானே!

அழகன் : அப்படி நினைக்காதீர்கள் மாமா. நமக்கு யாரும் எதையும்
அன்பில்லாமல் கொடுத்தால் வாங்குவோமா?

முனியப்பன் : நாம் யார்? அந்த அநாதை யார்? நம்மோடு அவனை
ஒப்பிடலாமா?

கலைவாணி : உயிர்கள் எல்லாம் சமம். உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்று நினைப்பதே தப்பு. “பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்” (972) அதாவது மனிதராய்ப் பிறந்தவர் எல்லாரும் சமமானவர்கள் என்றார் திருவள்ளுவர்.

முனியப்பன் : நீ எல்லாவற்றுக்கும் திருவள்ளுவரைத்தான் துணைக்கு அழைப்பாய். எனக்குப் பசிக்குது. தட்டைக் கொடு. அந்த நாய்க்குக் கொடுத்து விட்டு வருவேன்.

கலைவாணி : கடுகடுஎன்று முகத்தை வைத்துக் கொண்டு போகாதீங்க மாமா. கனிவாகக் கொடுத்து வாருங்கள்.

அழகன் : நானும் உங்களுடன் வருகிறேன் மாமா.

முனியப்பன் : வேண்டா. வேண்டா. நான் மட்டும் போகிறேன். (அருகில் சென்று) டேய்! இந்தா அள்ளிக் கொட்டிக்கோ. (என்று கூறி உணவுத் தட்டை அவன் முன் வைத்து விட்டு வருதல்)

அழகன் : அக்கா. மாமா ஏன் இப்படி எரிந்து விழுகிறார். நானாக இருந்தால் அதைச் சாப்பிடவே மாட்டேன்.

(காட்சி முடிவு)

<u>காட்சி 2</u>

இடம் : மேலே குறிப்பிட்ட இடம்

கதைமாந்தர் : அழகன், கலைவாணி, முனியப்பன், புகழினி

நிலை : ஏழைச் சிறுவன் உணவை உண்ணாமல் எழுந்து வேறு இடத்திற்குச் சென்று அமர்ந்திருத்தல். அப்போது...

அழகன் : மாமா அங்கே பாருங்கள்! நீங்கள் வேண்டா வெறுப்பாக வைத்து விட்டு வந்த உணவை அவன் மதிக்கவில்லை. அந்த உணவை உண்ணவில்லை; வெறுத்து ஒதுக்கிவிட்டான் பாருங்கள்.

புகழினி : ஐயோ பாவம்!

கலைவாணி : எனக்கு இப்படி நடக்கும் என்று முன்பே தெரியும். அந்தச் சிறுவன் மானமுள்ளவன்.

முனியப்பன் : (கவலையுடன்) கலைவாணி. அந்தச் சிறுவனை நான் மிகவும் தாழ்வாக எண்ணிவிட்டேன். என் முகத்தில் அவன் கரியைப் பூசி விட்டான். செய்த தவறை இப்பொழுதுதான் உணர்கிறேன். நான் போய் அந்தச் சிறுவனிடம் மன்னிப்புக் கேட்கப் போகிறேன்.

அழகன் : மாமா அதோ பாருங்கள்! அந்தச் சிறுவனை யாரோ ஒருவர் அழைத்துச் சென்று உணவளிக்கிறார். அவர் எத்துணை அன்பாக உணவளிகிறார் பாருங்கள்.

முனியப்பன் : (கவலையோடு) ஐயோ நான் எவ்வளவு பெரிய தப்பு செய்திருக்கிறேன். அந்தச் சிறுவன் எனக்கு நல்ல பாடம் புகட்டிவிட்டான். நான் இன்று சாப்பிடப்போவதில்லை.

புகழினி : மாமா அந்த ஏழைச் சிறுவன் எத்துணை மகிழ்ச்சியோடு சாப்பிடுகிறான் பாருங்கள்.

அழகன் : அக்கா , மாமாவுக்காக நான்போய் அந்தச் சிறுவனிடம் மன்னிப்புக் கேட்டுவரட்டுமா?

கலைவாணி : பயன் இல்லை. அவன் நம்மை ஏறெடுத்துப் பார்க்கமாட்டான். அதோ பார் அந்தப் பையனை அவர் தன்னுடன் அழைத்துச் செல்கிறார்.

**முனியப்பன் : அக்கா , நான் ஏன் இப்படி நடந்து கொண்டேன்? எனக்கு வெட்கமாக இருக்கிறது.**

**கலைவாணி : நடந்தது நடந்து விட்டது மாமா. இன்மேல் இப்படி நடக்காமல் பார்த்துக் கொள்வோம். முதலில் நாம் உணவு உண்ணுவோம். பிறகு நான் உங்களுக்குக்குச் சில செய்திகளைச் சொல்வேன்.**

**முனியப்பன் : எனக்கு....**

**கலைவாணி : அந்தப் பையனுக்கு உணவு கிடைத்துவிட்டது. அது நமக்கு மகிழ்ச்சிதான். முதலில் நாம் உணவு உண்ணுவோம். மற்றவற்றைப் பிறகு பேசிக் கொள்ளலாம்.**

**(காட்சி முடிவு)**

<u>**காட்சி 3**</u>

**இடம் : மேலே சுட்டிய இடம்**

**கதைமாந்தர் : அழகன், கலைவாணி, முனியப்பன், புகழினி**

**நிலை : விருந்தினர் முகம் அனிச்சப் பூவைவிட மென்மையானது என்றுரைக்கும் திருக்குறளுக்கு விளக்கம் கூறுதல்.**

**கலைவாணி : இன்று நாம் இங்குச் சுற்றுலாவந்தோம். அது துன்பத்தில் முடிந்து விடுமோ என்று கவலைப்பட்டேன். நல்ல வேளையாக அது ஒரு நல்ல பாடத்தைப் புகட்டியது.**

**முனியப்பன் : ஆமாம் அக்கா. இன்று இங்கு நடந்ததைப் பற்றித் திருவள்ளுவர் என்ன சொல்லியிருக்கிறார்? கொஞ்சம் விளக்கமாகச் சொல்லுங்கள் அக்கா.**

**அழகன் : ஆமாம் அம்மா. அதைத் தெரிந்து கொள்ள எனக்கும் ஆவலாக இருக்கிறது.**

**கலைவாணி : உனக்குத்தான் நான் பல திருக்குறள் பாடல்களைச் சொல்லித் தந்திருக்கிறேனே.**

**அழகன் : ஆமாம் . எனினும் இன்றைய நிகழ்வை ஒட்டிய குறள் எது? அதனைத் தெளிவாக விளக்குங்கள் அம்மா.**

**கலைவாணி : விருந்து பற்றி உங்களுக்குத் தெரியுமா?**

**முனியப்பன் : ஏன் தெரியுமா? சென்றவாரம் கூட அப்பா நம் வீட்டில் விருந்து வைத்தாரே.**

**அழகன் : நான் பல வகையான உணவுகளைச் சாப்பிட்டேன். விருந்து மிகமிகச் சுவையாக இருந்தது.**

**புகழினி : நான் பல வகையான உணவுகளைச் சாப்பிட்டேன்.**

**கலைவாணி : அது ஒருவகை விருந்து. நாம் திட்டமிட்டு ஏற்பாடு செய்த உணவுகளைக் கொண்ட விருந்து.**

**முனியப்பன் : வேறுவகையான விருந்தும் உள்ளதா? அதுபற்றி விளக்கு கலைவாணி.**

**கலைவாணி : முற்காலத்தில் உணவகங்கள், தங்கும் விடுதிகள் போன்றவை ஊர்களில் இல்லை.**

அழகன் : ஆம் அக்கா, அப்போதெல்லாம் வெளியூர்களிலிருந்து வருபவர்கள் எங்குச் சாப்பிடுவார்கள்? எங்குத் தங்குவார்கள்?

கலைவாணி : அவர்கள் எந்த ஊர் வழியாகச் செல்கிறார்களோ? அந்த ஊர்க்காரர்கள்தாம் அன்புடன் உணவளித்து, இரவு தங்க வைத்து அனுப்புவார்கள். தம் வீட்டில் சமைத்த உணவை அவர்களுடன் பகிர்ந்து உண்பார்கள். இதுபற்றித் திருவள்ளுவர் திருக்குறள் ஒன்பதாம் அதிகாரத்தில் விரிவாகச் சொல்லியிருக்கிறார்.

அழகன் : அம்மா, அந்த அதிகாரத்தின் தலைப்பு என்ன?

கலைவாணி : 'விருந்தோம்பல்'. முன்பின் அறிமுகமில்லாவர்கள் வந்தால் அவர்களை அன்புடன் வரவேற்று. உணவளிப்பதுதான் விருந்தோம்பல். இது ஒவ்வொரு வீட்டாரும் கடைப்பிடிக்க வேண்டிய நெறி என்று நிருவள்ளுவர் வலியுறுத்துகிறார்.

முனியப்பன் : விருந்து என்பதற்கு அப்படி ஒரு பொருள் உள்ளதா?

கலைவாணி : விருந்து அளித்தல் என்றால், வேண்டா வெறுப்பாக எதையாவது அள்ளிப் போடுவதில்லை விருந்தினரை முக மலர்ச்சியோடும் அன்போடும் வரவேற்று அளிக்கப் பெறுவதே உண்மையான விருந்து.

அழகன் : திருவள்ளுவர் எந்தக் குறளில் இது பற்றிக் கூறுகிறார்?

கலைவாணி : விருந்தோம்பல் என்னும் அதிகாரத்தில் 10 குறள்பாக்கள் உள்ளன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு கருத்தைக் கூறும்.

அந்த அதிகாரத்தின் கடைசிக் குறளான தொண்ணூறாம் குறள் மிக முக்கியமானது.

அழகன் : அந்தக் குறளைக் கூறுங்கள், அக்கா.

கலைவாணி : 'மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து' (90)

முனியப்பன் : இதன் அர்த்தம் புரியவில்லையே கலைவாணி.

கலைவாணி : விளக்குகிறேன் கருத்தோடு கேளுங்கள். பூ மென்மையானது அல்லவா?

அழகன் : ஆமாம். ஆமாம்.

கலைவாணி : பூக்களில் பலவகை உண்டு அல்லவா?

புகழினி : மல்லிகைப்பூ உண்டு, முல்லைப்பூ உண்டு, சாமந்திப்பூ உண்டு. இன்னும் பலவகைப்பூக்கள் உண்டு.

கலைவாணி : பூக்களில் அனிச்சம் பூ என்று ஒரு வகைப் பூ உள்ளது.

அழகன் : அப்படியா?

கலைவாணி : ஆம். அது மிக மிக மென்மையானது. அந்தப் பூவை நாம் மோந்து பார்க்க மூக்கருகில் கொண்டு சென்ற உடனே மூச்சுக் காற்று இலேசாகப் பட்டாலுமே வாடிவிடும். ஆனால் விருந்தினர் முகமோ நம் முகம் மாறுபட்டு அன்பில்லாமல் பார்த்தாலே வாடிவிடும் என்பது இதன் பொருள்.

அழகன் : அதை நாம் நேராகவே பார்த்தோமே. பசியால் வாடிக் கொண்டிருந்த அந்தப் பையன் மாமா அன்பில்லாமல் வைத்துவிட்டு வந்த உணவை உண்ண வில்லையே. மற்றொருவர் அன்புடன் கொடுத்த உணவைத் தானே உண்டான்.

கலைவாணி : ஆம். மானம் உள்ளவர்கள். எவ்வளவு பசியாக இருந்தாலும் அன்பில்லாமல் கொடுக்கும் உணவை யாரும் உண்ண மாட்டார்கள். இந்த உண்மையை நாம் கண்முன்னாலேயே கண்டோமே.

முனியப்பன் : திருவள்ளுவர் சொல்லியுள்ள கருத்து மிக உயர்ந்த கருத்து.

அழகன் : இன்று நான் ஒரு புதிய உண்மையைப் புரிந்து கொண்டேன். மாமாவுக்கு நன்றி.

புகழினி : அண்ணா, அக்காதானே குறளை விளக்கப்படுத்தினார்? நீங்கள் மாமாவுக்கு நன்றி கூறுகிறீர்களே.

அழகன் : மாமா அப்படி நடந்து கொண்டதால்தானே, அக்கா விருந்து பற்றிய குறளைச் சொல்லி விளக்க முடிந்தது.

முனியப்பன் : நான் அப்படி நடந்து கொண்டதால்தான் ஒரு திருக்குறளுக்கு விளக்கம் கிடைத்தது என்றாலும், பொருத்தமான நேரத்தில் பொருத்தமான குறளை எடுத்து விளக்கிய கலைவாணிக்கு எல்லாரும் நன்றி கூறுவோம்.

நாடகம் நிறைவு.

**உதவியோரை மறத்தலாகாது**



--திருமதி தாமரை சீனிவாசராவ்

கம்போடியா-ஆங்கோர் தமிழ்ச் சங்கப் பொருளாளர். புதுச்சேரியில் பல சமூக அமைப்புகளில் பொறுப்பு வகித்துப் பொதுப்பணியாற்றிவருகிறார்.பல்வேறு தமிழ் அமைப்புகளுடன் இணைந்து தமிழ்ப்பணியாற்றி வருகிறார்.முற்போக்கு எழுத்தாளர்.முன்னணிப் பாவலர். நம் இதழின் பொறுப்பாசிரியர்.

**ஆதவனும்,அன்பும் ஒரே கிராமத்தில் ஒன்றாய் வளர்ந்தவர்கள்.வேளாண்மை செய்து கொண்டு இரு குடும்பமும்,சிறப்பாய் வாழ்ந்து வந்தார்கள்.தெளிந்த நீரோடையின் அழகும்பச்சைப் பசேலென ஒளிரும் பயிரழகும்,ஓடி ஆடும் கன்றுகளின் அழகும், பறவைகளும், விலங்குகளும், அவர் நிலத்தின் அடையாளங்களைக் தனித்து காட்டும்.வேளாண்மையே நமதுஅடையாளம் என்று போற்றி வாழ்ந்து வந்தனர்.**
**இப்படியாக வாழ்ந்து வந்த வேளையில்திடீரென அன்பு வீட்டில் பெரிய பொருளாதார நெருக்கடி ஏற்பட்டது. செய்வதறியாது திகைத்தபோதுகுடும்பமே மிகவும் வருந்திய சூழ்நிலையில், யாரிடம் உதவி பெறுவது என்பதை அறியாமல் தவித்தனர். மிகவும் சிக்கலான**

நேரத்தில் ஆதவனின் அப்பா, நிலைமையைக் கண்டறிந்தார்.ஆதவன்தன் தந்தையிடம் தன் நண்பனின் குடும்பமும் ,நம் குடும்பமும் தானே என்று ஆபத்தில் நாம் உதவாவிட்டால் யார் உதவுவார்.என்று கூறி உதவி செய்யஎண்ணினான்.ஆதவனின் குடும்பமும் எவ்வித மனச் சஞ்சலமும் இல்லாமல் இதற்கு ஒப்புதல் தெரிவித்தனர்.

அப்பாவின் சிறுசேமிப்பில் இருந்த பணத்தையும்அம்மாவின் நகைகளையும் அளித்து, ஆபத்தில் பேருதவி புரிந்தான்.நன்றி சொல்வதற்கு வார்த்தைகளேஇல்லை என்று கண்ணீருடன் உதவியைப் பெற்றுக் கொண்டுதாங்கள் வேறு ஊருக்கு செல்ல இருப்பதாகவும், நிலைமை சற்று சரியானவுடன், திரும்ப வரலாம் என்று எண்ணியுள்ளதாக கூறினர்.கனத்த இதயத்துடன் தைரியத்தைக் கூறி, உறுதியாக நீங்கள் நல்ல நிலைமையை அடைவீர்கள்என்று சொல்லி அனுப்பி வைத்தனர்.

காலங்கள் கடந்தன.அன்பு குடும்பமும்,கடின உழைப்பின் மூலம் நல்லநிலைமைக்கு வந்தது. எந்தவித குறையும் இல்லாமல் அவர்கள்குடும்பம்,மகிழ்ச்சியாக வாழ்ந்து வந்தது.ஆனால் நெடுங்காலமாக ஆதவனின் குடும்பத்தாரோடு தொடர்பற்று இருந்தனர்.எப்படிப்பட்ட ஆபத்தான காலத்தில் உதவினார்கள் என்பதையும் மறந்துவிட்டனர்.அவர்கள் அளித்த பணம் மற்றும் நகைகளையும் கூட திரும்பத் தரவில்லை.இப்படியாக காலம் சென்றுகொண்டிருந்தது. ஒருநாள் அன்பும்,ஆதவனும் ஒரு நிகழ்வில் ஒன்றாகச்சந்திக்க நேர்ந்தது. ஆவலுடன் ஓடி வந்த ஆதவனை,சற்றுக் கூட மதிக்கவில்லை அன்பு.கண்டும் காணாதவன் போல் ஒதுங்கினான். மிகவும் அதிர்ச்சியானான் ஆதவன்.ஆனாலும் சற்று விலகிசமுதாயத்தில் நல்ல மதிப்புடன் இருக்கும் அவன் சாதாரணமாக இருக்கும் இவனைக் கண்டுவிலகுகிறான் போலும் என்று,தனக்குள்ளே எண்ணிக் கொண்டு சற்றுத் தள்ளிநின்றுகொண்டான்.மனதில் பழகிய

நினைவுகளும், எண்ணங்களும் சுழன்றாட, வறண்ட மனத்தின்,இறுகிய நினைவுகளோடு அமைதியாக இருந்தான்.

அப்போது அவர்கள் ஊரின் பெரியவர் ஒருவர்,ஆதவனை அழைத்து,நலம் விசாரித்தார். எப்போதும் போல அதே பெருமிதத்துடன் வேளாண்மைசெய்து,நன்றாக வாழ்ந்துக் கொண்டிருக்கிறோம் ஐயா என்று கூறிக்கொண்டிருந்தான்.அப்போது அப்பெரியவர்எவ்வளவு பெரிய குணமப்பா உனக்கு.அந்த வயதில் எப்பேர்ப்பட்ட காரியத்தைச் செய்தாய் என்று வந்திருந்தவர்களிடம்,அன்பு குடும்பத்திற்காக ஆதவன் செய்த பெரியஉதவிகளை,அவனுடைய உயரிய குணத்தைப் பேசி பாராட்டினார்.

வந்திருந்தவர் அனைவரும் வியந்து பாராட்டினர்.இப்படியொரு நண்பன் வேண்டுமே என்று கூறினர். மேலும் ஆதவன் போன்ற நல்லவரின் நட்பை என்றுமே மறக்கக் கூடாது என்றும் அன்பிற்கு அறிவு புகட்டினார் அப்பெரியவர்.

அன்புக்கு மிகவும் வெட்கமாகப் போய்விட்டது.தன்னுடைய அருமையான நண்பணின் நட்பை இழந்த வலியோடு, பலர் முன் ஆதவனை அவமதித்த செயலை எண்ணிவருத்தத்தோடு வெளியேறினான்.

நாம் நன்றாக வாழும் காலத்தில் சிறந்தவராய் மற்றவருக்குக் காட்டுவதில் பெருமையில்லை. மாறாக அந்நிலைக்கு உயர உதவியவரின் நட்பைமறக்காமல் போற்றுவதே சிறந்த குணத்திற்கு அடையாளம்.நல்லோரின்நட்பைப் போற்றுவோம்,நாளும் சுகமாய் வாழ்வோம்.

மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துள் துப்பாயர் நட்பு.(குறள் : 106 அதிகாரம் : செய்நன்றி அறிதல்)

உன் துன்பக் காலத்தில் உன்னோடு துணையிருந்தவரின் நட்பைஇழத்தல் ஆகாது என்று கூறுகிறார் வள்ளுவர்.மனிதன் வாழும் காலத்தில்பிறரைச் சார்ந்து இருத்தல் இயல்பே.வாழ்வில் எண்ணற்ற சோதனைகளைச்சந்திக்கும் போது,சில சமயங்களில் பிறரின் உதவியை எதிர்பார்த்து வாழும்சூழல் உருவாகும்.அப்படிப்பட்ட நிலையில் ஒருவரிடமிருந்து நாம் பெறும் உதவியை மறத்தலாகாது.காலம் முழுதும் அவ்வுதவியை நினைத்துபோற்றிட வேண்டும். துன்பத்தில்,கடினமான சூழலில் ஒருவர் பறிதவிக்கும்போது அதற்காக

இரக்கப்பட்டு உதவி செய்ய வருவோர் மேலோர்.அப்படிப்பட்டநல்லவரின் தொடர்பைநம்

நிலைமை மாறியதும் மறந்து விடக்கூடாதுஎன்பதே இக்குறள் சொல்லும் பொருள்.

## *உருவு கண்டு* (சிறுகதை)

-------------------------------

அரசு மருத்துவமனையிலிருந்து வந்த அவசர அழைப்பைக் கேட்டதும் " இதோ வெகு விரைவில் வந்து விடுகிறேன்" என்றவாறு கசங்கல் துணியோடும் கலங்கிய முகத்தோடும் பேருந்தில் ஏறி விரைந்தான்.

பணம் அவசரத்தில் எடுக்காமல் வந்து விட்டோமே என்ற போது பையைத் துழாவினான் ஐந்து நூறு ரூபாய் நோட்டுக்கள் பத்திரமாயிருந்தது.

பேருந்தில் கூட்ட நெரிசல். எல்லோருமே அலுவலகம், கல்லூரிகள், பள்ளிகள், பிற நிறுவனங்களென்று படையெடுக்கும் கூட்டம்.

அத்தோடு நாகரீக உடையிலுள்ளவர்கள் கந்தலான, கசங்கலான ஆடை அணிந்த கந்தனைக்கண்டு "தள்ளி நில்லுயா"என இளக்காரமாக பேசினார்கள்.

கந்தனின் பதட்டமெல்லாம் மருத்துவமனையின் மீதே இருந்தது. தோளிலிருந்த துண்டு நழுவிக் கீழே அடிக்கடி விழ குனிந்து குனிந்து எடுத்து மீண்டும் தோளில் மாட்டிக்கொண்டான்.

பேருந்தில் "ஆட்டுவித்தால் யாரொருவர் ஆடாதாரே கண்ணா.... என்ற பாடலுக்கிடையில்

"எங்கய்யா போகனும்"

"இராசபாளையம் அரசு மருத்துவ மனை" எனச்சொல்லி பையைத் துளாவிய போது பகீரென்றது.

பயணச்சீட்டை நடத்துனர் கொடுப்பதை வாங்குமுன் பதை பதைக்க தேடினான் கீழே குனிந்து துண்டை எடுத்த போது விழுந்திருக்குமோ என்று.

"யோவ்..! என்னயா தேடுற"

"பையில பணம் வச்சிருந்தேன் எங்கேயோ விழுந்திருச்சு"

"பணத்த காணுமா எவ்வளவுயா"

"ஐநூறு ரூபாய்ங்க"

"யோவ்..! பொய் சொன்னாலும் பொருந்த சொல்லுயா..

"சத்தியமா காணும்யா..

"கீழ இறங்குயா"

ஆத்திரத்தோடு நடத்துனர் சொன்னதும் வண்டி நிறுத்தப்பட்டது.

"ஏன் சார் வண்டியில பெண்களுக்கு இலவசம்னு சொன்ன மாதிரி இந்த மாதிரி ஏழைகளுக்கும் இலவசம்னு சொல்லியிருக்கலாம்.

"இலவசம் இலவசம்னு குடுத்து குடுத்துதான்யா நாடு நாசமாப்போகப் போகுது"

"பாவம்யா உச்சி வெயிலு காலில் செருப்பு கூட இல்லை,

"அப்படிப்பாவம் பாக்குற ஆளு நீ எடேன்,

"இந்தாங்க பணம் அய்யா நீங்க மேல வாங்க,

பேருந்து நகர்ந்தது நன்றிப்பெருக்கோடு பார்த்து கையெடுத்துக் கும்பிட்டான்.

"அட விடுங்கயா நானும் உங்களை மாதிரி தொழிலாளி தான், ஆமா திரும்ப எப்படி வருவே..?"
"பரவாயில்லயா நடந்தே வந்திருவேன்"
மருத்துவமனையை நெருங்கி விட்டதும் வாசற்படியை நோக்கி நடந்து வந்தவனின் முன் முழு ஐநூறு ரூபாய் ஒரு பெண்மணியின் காலுக்குக் கீழே கிடந்தது.
"அம்மா பணம் கீழ கிடக்கு காத்துக்கு பறந்திடாம,"
அனைவரின் கவனமும் அவன் மீது பாய்ந்த போது
"பெரியவரே ஐநூறு ரூபா பணம் காணும்னு சொன்னீங்களே அது உங்க பணமா இருக்கும் எடுத்துக்கோங்க,"
"இல்லைங்கயா இது என் பணமில்ல நான் வச்சிருந்தது அஞ்சும் நூறு ரூபா தாளு,
இப்போது அனைவரது பார்வையும் அவர் மீது பரிதாபத்தோடு பாய்ந்தது.
"ஆமா மருத்துவ மனைக்கு என்ன விசயமா போறீங்க,
"...........,"
"சும்மா சொல்லுங்க ஏதாவது பண உதவி தேவைன்னா கூட நான் உதவுறேன்"
"அய்யா உதவுறதயும், தர்மம் பண்ணியதையும் வெளிய சொல்லக்கூடாதுனு சொல்வாங்க, நீங்க எனக்கு பயணச்சீட்டு எடுத்து குறித்த நேரத்தில் வர உதவிய கடவுள் அதனால சொல்றேன், ஒரு உசுரக் காப்பாத்துறதுக்காக ரத்தம் குடுக்க கூப்பிட்டிருந்தாங்க அதான்......
எனச் சொல்லி முடித்ததும்
பல பேர் கன்னத்தில் அறை விழுந்தது போல இருந்தது.
*உருவு கண்டு எள்ளாமை வேண்டும் உருள் பெரும் தேர்க்கு அச்சாணி அன்னார் உடைத்து*
என்ற பேருந்தின் உட்புறத் திருக்குறளை அப்போதுதான் பலர் உணரவே ஆரம்பித்தார்கள்.
வண்டி நின்றபோது ஒலித்த பாடலின் கடைசி வரி அனைவரின் கண்களிலும் கண்ணீர் வழிய வைத்தது
*நன்மை செய்து துன்பம் வாங்கும் உள்ளம் கேட்பேன்*

உலக ஒப்புரவாளர் கழகம்-புலனக் குழுவில் பகிர்ந்த கதை

கற்க கசடற க் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.



# குறள் விருந்து




தி.வ.ஆ.-2053 வைகாசி- 10 பொ.ஆ.-2022 மே-24

திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ்

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்









குறளைக் கற்போம் குழந்தைகளே

குன்றெனப் புகழைக் குவிப்போமே

பிஞ்சு வயதினில் கற்றிடும் குறளால்

நெஞ்சில் நன்னெறி விதைப்போமே

சிறுவர்கள் பயிலும் குறள்நெறியால்

பெருமைகள் பலவும் சேர்ப்போமே

வள்ளுவர் தந்த வான்மறையால்

வாழ்வில் சிறப்புடன் உயர்வோமே

நாடும் வீடும் நலம் பெறவே

நாளும் குறளைக் கற்போமே

கசடறக் கற்றுத் தெளிவோமே

கற்றபின் அதன்வழி நிற்போமே

வல்லரசாய் நாட்டை வளர்ப்போமே

வல்லமை பெற்றிட உழைப்போமே

சிறப்பாசிரியர்: முனைவர் முரசு நெடுமாறன் பொறுப்பாசிரியர்: திருமதி.தாமரை சீனிவாச ராவ்

ஆசிரியர்:மறைமலை இலக்குவனார் இணை ஆசிரியர்: தி.ஈழக்கதிர்

# வகுப்பறை



--திருமதி தாமரை சீனிவாசராவ்

கம்போடியா-ஆங்கோர் தமிழ்ச் சங்கப் பொருளாளர். புதுச்சேரியில் பல சமூக அமைப்புகளில் பொறுப்பு வகித்துப் பொதுப்பணியாற்றிவருகிறார்.பல்வேறு தமிழ் அமைப்புகளுடன் இணைந்து தமிழ்ப்பணியாற்றி வருகிறார்.முற்போக்கு எழுத்தாளர்.முன்னணிப் பாவலர். நம் இதழின் பொறுப்பாசிரியர்.

ஆசிரியர்: மாணவர்களே அனைவருக்கும் காலை வணக்கம்.இன்று நாம் எதைப் பற்றி படிக்க போகிறோம் தெரியுமா.

மாணவர்கள்: காலை வணக்கம் ஐயா.எதைப் பற்றி படிக்கப் போகிறோம் ஐயா.எங்களுக்கும் ஆர்வமாக உள்ளது,சொல்லுங்கள் ஐயா.

ஆசிரியர்: இன்று நாம் அனைவரும் ஒரு கதை தெரிந்துகொள்வோம்.ஒரு அடர்ந்த காட்டில் பல வனவிலங்குகள்,பறவைகள்,என பல உயிரினங்கள் வாழ்ந்து வந்தன.அவை அனைத்துமே நல்ல நீர் நிலைகளும்,,பச்சைப் பசேலென,செழித்து காணப்பட்ட நிலங்களில் மகிழ்ச்சியாக உண்டும், ஓடியாடித் திரிந்தும்,மகிழ்ச்சியுடன் காணப்பட்டன. புலி, சிங்கம், காட்டெருமைகள், கரடி, மான், நரி, யானை, மயில், குயில், கிளி, காகம், செம்போத்து, மைனாஆகிய விலங்குகள்,பறவைகள் கூட்டம்,கூட்டமாக தன் இனத்தோடு சுற்றித் திரிந்தன.துள்ளி விளையாடும்,மீனினங்களை

கவ்வி பிடித்து நாரைக் கூட்டம் உண்டு மகிழ்ந்தது.சூட்டைக் குறைக்க யானைகளும்,எருதுகளும்,வரிக் குதிரைகளும் சேற்றில் புரண்டு,நீரில் குளித்து மகிழ்ந்தன.

மாணவன்:ஐயா, எனக்கு ஒரு ஐயம்.

ஆசிரியர்: என்ன ஐயம்?

மாணவன் : ஐயா விலங்குகள் அனைத்தும் கூட்டமாக உள்ளதே! ஒன்றையொன்று சண்டையிட்டு,அடித்துச் சாப்பிட்டுவிடாதா?



ஆசிரியர்: சரியான கேள்வி கேட்டாயப்பா,சொல்கிறேன் கேள்.ஐந்தறிவு சீவன்கள் தானே தவிர அவை மனிதர்களைப் போல,அளவுக்கதிகமாக எதையும் சேர்த்துக் கொள்வதில்லை.பசியெடுக்கும் போது மட்டுமே வேட்டையாடும். மற்ற நேரங்களில் அருகருகே இருந்தாலும், ஒன்றையொன்று ஒன்றும் செய்வதில்லை.

மாணவி: அப்போ விலங்குகள் நம்மை விட மேன்மையானது தான் போல, என்றவுடன் மாணவர்கள் அனைவரும் சிரித்தனர்.

ஆசிரியர்: அப்படி இல்லை,எல்லா உயிரினங்களிடத்திலும் சில நேரங்களில் தீய குணங்கள் இருப்பது சாதாரணம் தான் என்றார்.சரி நாம்

கதைக்குள்ளே செல்வோம்.உங்களுக்கு எல்லாம் தெரியும்..காட்டுக்கு இராசா யாரு?

மாணவர் : சிங்கம் (சத்தமாகக் கூறினர்).



ஆசிரியர்:சரியாகச் சொல்லிட்டீங்களே..அந்த சிங்க இராசாவுக்கு மரியாதையாக மற்ற விலங்குகள் எல்லாம் தினமும் வந்து,மரியாதை செஞ்சுட்டு போகுமாம்.அப்படி தினமும் வரும் விலங்குகளை அதிகாரம் பண்ணிக்கிட்டு ஒரு சோம்பல் நரி சுத்தி சுத்தி வந்துதாம்.எப்போதும் சிங்கத்துக் கிட்ட வந்து, சிங்க இராசா,நீங்க எவ்வளவு பெரியவர்.இந்த காட்டையே நீங்க தானே காப்பத்தறீங்க..உங்கள் அடிமை தானே நாங்களெல்லாம்.நான் என்றுமே உங்களுக்கு உண்மையாகவே இருப்பேன்.என்னை எப்போது அழைத்தாலும் உங்களுக்கு ஓடி வந்து பணிவிடை செய்வேன்.எந்தெந்த விலங்கினங்கள்,உங்களுக்கு சாப்பிட வேண்டுமென்று சொல்லுங்கள்.நான் அவற்றை மிரட்டி,உங்கள் பசியாற்ற வரச் சொல்கிறேன் என்றது.சிங்கமும் முழங்கியவாறு,சரி,சரி என்பது

போல் தலையை அசைத்தது.மகிழ்ச்சியான நரியோ,சிங்கம் தன் பேச்சிற்கு இசைவளித்து தலையை ஆட்டுகிறது என்று எண்ணி,தந்திரமாக மேலும்,மேலும் துதிபாடிக் கொண்டே சென்றது.பிற மிருகங்களிடம் போய்,எல்லோரும் கேட்டுக்குங்க.சிங்க இராசா என்னைத் தான் அவரோட உதவியாளரா வச்சிருக்காரு.நீங்க எல்லாம் இனி என் பேச்சை தான் கேக்கணும்.நான் சொல்கிற படிதான் நடக்கணும்னு கட்டளை இட்டது.புதிதாக இந்த நரியின் செயல்பாட்டைக் கண்டு,மற்ற விலங்குகள் குழப்பமடைந்து,எரிச்சலுற்றது

இவ்வாறாக நாட்கள் செல்லச் செல்ல நரியின் தொல்லை கூடிக் கொண்டே சென்றது.இங்கு வரச் சொன்னார்,அங்கு வரச் சொன்னார் சிங்க இராசா என்று பொய் சொல்லி,தனது தந்திர வார்த்தைகளால் மாயவலை பின்னி தனி இராசாங்கமே நடத்தி வந்தது.பாவமான முயல் போன்ற சிறு விலங்குகள் சென்று,நரிக்கு உணவாக மாட்டிக் கொண்டன.நன்றாகத் தின்று கொழுத்து விட்ட நரியோ,தன்னைப் பாதி சிங்கமாகவே கருதி ஆணவம் மேலோங்கச் சுற்றித் திரிந்தது.இந்தக் காட்டை ஆள்வதற்கு,என்னால் முடியாதா?ஏன் இந்தச் சிங்கம் தான் இராசாவாக இருக்க வேண்டுமா என்று புகழ் போதை தலைக்கேற்றிக் கொண்டு,கண்டதெல்லாம் பேசித் திரிந்தது.



இந்த சமயத்தில்,மற்ற விலங்குகள் மூலம் அனைத்து செய்திகளையும் கேட்டுக் கொண்டிருந்தது சிங்கம்.உழைத்துச் சாப்பிடாமல்,ஏமாற்றிச் சாப்பிட்டுக் கொண்டும், மற்ற விலங்குகளை அடிமைப்படுத்திக் கொண்டு இருக்கும் நரியின் செயலைக் கண்டு கொதிப்படைந்தது சிங்கம்.அளவிற்கு அதிகமாக நரி வந்து துதி பாடும் போதே சிங்கத்திற்கு அதன் செயலைக் கண்டு ஐயம் ஏற்பட்டது.எனினும் இவ்வளவு துணிச்சலாக பல காரியங்களைச் செய்திருக்கும் என்று எண்ணவில்லை.இதற்கு தக்க பாடத்தைப் புகட்டுகிறேன் என்று சிங்கம் முடிவெடுத்தது.

சிங்கம் ஒரு திட்டம் தீட்டியது.அதற்கேற்றாற் போல,மற்ற விலங்குகளும்,இசைவு செய்து சிங்கத்திற்கு ஒத்துழைத்தது.ஒரு நாள் மானொன்று நரியின் அருகே சென்று,நரியாரே கேள்விப்பட்டீங்களா? பக்கத்துக் காட்டுல,இருக்கிற சிங்கக் கூட்டம்,பல அட்டூழியங்கள செய்யுதாம்.நம்ம சிங்க இராசாவோ உங்கப் பேச்சைக் கேட்டுக்கிட்டு,வேட்டையாடாம சாப்பிட்டு தூங்கிக் கிடக்கிறாரு.என்ன ஆகப் போகுதோ தெரியலயே.பயமா இருக்கு என்று,பதறியவாறு கூறியது.கூட வந்த முயல் குட்டியும்,ஆமா நரியாரே,எங்களை எல்லாம் வேட்டையாடிட்டா,அய்யோ பாவம், நீங்க உணவுக்கு என்ன பண்ணுவீங்க, உங்களையும் அது கொன்னுட்டா என்ன செய்யறது,என்று கேட்டது.

உடனே நரி, யார வந்து கொல்லும்,என்னை யாராலயும் கொல்ல முடியாது.நான் சிங்கத்தைப் போல சாப்பிட்டு நல்லா பலம் சேர்த்து வச்சிருக்கேன் என்றது.என்னை யாருன்னு நினைச்சீங்க?எத்தனை சிங்கம் வந்தாலும் துரத்திடுவேன் என்று வீரமாகக் கூறியது.ஆனால் உள்ளூர அச்சம் தொற்றிக் கொண்டது நரிக்கு.உண்மையிலேயே தனக்கு ஏதாவது ஆகிவிடுமா என்று குழம்பியது. சிறு காலடிச் சத்தம் கேட்டாலும்

பதறியடித்துக் கொண்டு ஓடிப் போய்ப் பார்த்தது.பயம் மேலோங்க சிங்க இராசாவைப் போய் பார்க்கலாமானு யோசித்தது.முதலில் பயந்தாலும் நிலைமை என்னவென்று கண்டு வரலாம் என்று தயக்கத்துடன் கிளம்பியது.

மெதுவாக சிங்கக் குகைக்குள் காலடி வைக்கும் போது,சிங்க இராசாவின் முழக்கத்தைக் கேட்டு,ஓட்டம் பிடித்தது.தான் தவறு செய்து விட்டோம் என்று உண்மையை உணரத் தொடங்கியது.யாரங்கே என்று சிங்கம் கேட்டவுடன்,நான் தான் இராசா,உங்க அடிமை நரி வந்திருக்கிறேன் என்றது.ஏன் வந்திருக்கிறாய் என சிங்கம் மிரட்டியவுடன்,சிங்கத்திற்கு தான் செய்த அட்டூழியங்கள் தெரிந்து விட்டது என்று உணர்ந்து நடுங்கியவாறே பதிலளித்தது.

என்னை மன்னித்துவிடுங்கள் சிங்க இராசா.உங்களுக்கு தெரியாமல் சில தவறுகளைச் செய்துவிட்டேன்.உங்களுக்கு உணவு தருவதாகச் சொல்லி பல மிருகங்களைக் கொன்று சாப்பிட்டேன்.உழைக்காமல் பொய் சொல்லி வாழ்ந்தேன்.தற்போது பக்கத்துக் காட்டிலிருந்து,சிங்கமொன்று வந்து அடிக்கடி பயமுறுத்துகிறது.அதன் சத்தம் எனை நடுங்கச் செய்கிறது.தயவு செய்து நீங்கள் வந்து அதைத் துரத்த வேண்டும் என்று கெஞ்சியது.

கோபமாக முறைத்த சிங்கம்,உன் தீய எண்ணத்தாலும், நயவஞ்சகத்தாலும்,எப்பேர்ப்பட்ட காரியத்தைச் செய்யத் துணிந்தாய் நீ. எவ்வளவு தைரியம் உனக்கு?என்று கேட்டது.நடுங்கிய நரியோ,மன்னித்து விடுங்கள்,என் உயிரைக் காப்பாற்றுங்கள் என்று கெஞ்சியது.கூடி இருந்த மற்ற விலங்குகள், அதற்கு தண்டனை தந்தே ஆக வேண்டும் என்று கூறின.

ஆனால் சிங்க இராசாவோ பெருந்தன்மையாக,மன்னித்து ,ஓடிப்போ எங்காவது என்றது.தப்பித்தோம்,பிழைத்தோம் என்று அலறியடித்துக் கொண்டு ஓடியது.

என்ன மாணவர்களே,சிங்கம் செய்தது சரியா,தவறா என்று மாணவர்களிடம் கேட்டார்.

மாணவர் : கதை மிகவும் நன்றாக இருந்தது ஐயா என்றனர் அனைவரும்.

ஆனா சிங்கம் மன்னித்தது தவறு தானே!தவறு செய்தவர்களைத் தண்டிக்கத் தானே வேண்டும் என்றாள் ஒரு மாணவி,

அதை மறுத்து,இன்னொரு மாணவன்,

"இல்லை,இல்லை சிங்கம் செய்தது சரியே.தவறு செய்தவர்களைத் தண்டிப்பதை விட, மன்னித்து,அவர்களுடைய தவறை உணர்த்தச் செய்வது தான் சிறந்த பண்பு

இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண

நன்னயஞ் செய்து விடல் (குறள் 314)

துன்பம் செய்தவரைத் தண்டித்தல் அவரே நாணும் படியாக அவருக்கு நல்லுதவி செய்து அவருடைய தீமையையும் மறந்து விடுதலாகும்."

என்றான்.

ஆசிரியர் : பரவாயில்லயே அழகாய் கூறினாய்,உண்மை தான்,என ஆசிரியர் தெளிவாக விளக்கினார்.ஒரு நல்ல தலைமைப் பண்பு என்பது,தன்னைச் சுற்றியுள்ளவர்களைக் காப்பது, வழிநடத்துவதுமேயாகும்

அவ்வகையில் உழைத்துச் சாப்பிட வேண்டுமென்றும்,பிறரை ஏமாற்றக் கூடாது,சோம்பல் கொள்ளாமல்,பிறரை ஏமாற்றாமல் வாழ்வது நமக்கும் பொருந்தும் தானே, மாணவர்களே என்று கேட்டார்

மாணவர்: ஆமாம் ஐயா, சிங்கம் போல நாங்களும் வீரத்தோடும்,நல்ல தலைமைப் பண்புகளோடும் நேர்மையோடும் நடந்துக் கொள்வோம் ஐயா என்று கூறினர்.

வகுப்பறையின் நேரம் பயனுள்ள கதையோடு இனிதே நிறைவடைந்தது.



தெனாலி ராமன் கதைகள் –



## புலவரை வென்ற தெனாலிராமன்

செல்வன் செ.குருபரன்

பன்னிரண்டாம் வகுப்பு - 'பி ' பிரிவு

பாலவித்தியாமந்திர் பள்ளி

பள்ளிமாணவர்கள் குறள்விளக்கக் கதைகள்,கட்டுரைகள்,கவிதைகள் அனுப்பலாம். anjal@kuralvirtual.com என்னும் மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்புங்கள். உங்கள் நிழற்படம்.படிக்கும்வகுப்பு,பள்ளி விவரங்களையும் தவறாது குறிப்பிடுங்கள்.

ஒரு சமயம் விசயநகரத்திற்கு வித்தியாசாகர் என்ற ஒருவர் வந்திருந்தார். அவர் சகல சாத்திரங்களையும் அறிந்த புலவர். தம்மைப் போல யாரும் புலமை பெற்றவராக இருக்கமுடியாது என ஆணவம் கொண்டவர். அதனால் ஒவ்வொரு ஊராகச் சென்று அங்குள்ள புலவர்களையெல்லாம் வாதத்திற்கு அழைத்து வெற்றி பெற்று, பெருமையாகத் திரிந்து கொண்டிருந்தார். அவ்வாறே ஒருநாள் விசயநகரத்திற்கும் வந்தார்.

அவர் கிருட்டிணதேவராயரின் அவைக்கு வந்து தன் திறமையை வெளிப்படுத்தினார். அந்த அவையில் பெத்தண்ணா, சூரண்ணா, திம்மண்ணா போன்ற புலவர்கள் இருந்தனர். அவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு துறையில் வல்லவர்கள். அவர்கள் கூட வித்தியாசாகரை கண்டு அஞ்சிப் பின்வாங்கினர். தம்மிடம் வாதிட யாரும் முன்வராதது கண்ட வித்தியாசாகர் ஆணவமுற்றார். தம் அவையில் சிறந்தவர்கள் இல்லையோ என இராயருக்கோ வருத்தம்.



அந்தச் சமயத்தில் தெனாலிராமன் அவை முன் வந்து “பண்டிதரே! உம்மிடம் வாதம் புரிய நான் தயார். இன்று போய் நாளை வாருங்கள்” என்றான்.

இதை கேட்டதும் மன்னருக்கும், மற்ற புலவர்களுக்கும் உற்சாகமாக இருந்தது. அவர்கள் இராமனை வெகுவாகப் பாராட்டினர். இருந்தாலும்

மறுநாள் வித்தியாசாகரை இராமனால் வெல்ல முடியுமா? என்ற சந்தேகம் அனைவருக்கும் இருந்தது.



மறுநாள் இராமனை அரசவைப் பண்டிதரைப் போன்ற விலையுயர்ந்த ஆபரணங்களால் அலங்கரித்து அவைக்கு அழைத்து வந்தனர். இராமன் தன் கையில் பட்டுத்துணியால் சுற்றப்பட்ட ஒரு கட்டை வைத்திருந்தான்.

வாதம் ஆரம்பமாகியது. வித்தியாசாகர் இராமனின் கையில் இருந்த கட்டைப்பார்த்தார். அது என்னவாக இருக்கமுடியும்? என்று அவரால் ஊகிக்கமுடியவில்லை. எனவே “ஐயா! கையில் வைத்திருக்கிறீர்களே! அது என்ன? ” என்று கேட்டார்.

இராமன் அவரை அலட்சியமாகப் பார்த்து, கம்பீரமாக “இது திலகாஷ்ட மகிஷ பந்தனம் என்னும் நூல். இதைக்கொண்டுதான் உம்மிடம் வாதிடப்போகிறேன்!” என்றான்.

வித்தியாசாகருக்குக் குழப்பம் மேலிட்டது. அவர் இது வரை எத்தனையோ நூல்களைப் படித்திருக்கிறார். கேட்டிருக்கிறார். ஆனால் இராமன் கூறியது போல் ஒரு நூலைப்பற்றி இதுவரை கேள்விபட்டதில்லை. அந்த நூலில் என்ன கூறியிருக்குமோ? அதற்குத் தம்மால் பதில் சொல்ல முடியுமோ? முடியாதோ? என்ற அச்சம் ஏற்பட்டது. அதனால் நயமாக “வாதத்தை நாளை வைத்துக்கொள்ளலாம்” என்று சொல்லிவிட்டு சென்றார்.

அன்றிரவு வித்தியாசாகர் பலவாறு சிந்தித்துப் பார்த்தார். இராமன் கூறிய நூல் புரிந்துக்கொள்ள முடியாத நூலாக இருந்தது. இதுவரை தோல்வியே கண்டிராத அவர் இராமனிடம் தோல்வி அடைய விரும்பவில்லை. ஆகவே அந்த இரவே சொல்லிக்கொள்ளாமல் ஊரை விட்டே ஓடிவிட்டார்.

மறுநாள் அனைவரும் வந்து கூடினர். ஆனால் வித்தியாசாகர் வரவில்லை. விசாரித்த பொழுது அவர் இரவே ஊரை விட்டு ஓடி விட்டார் என்ற செய்திதான் கிடைத்தது. வெகு சுலபமாக அவரை வென்ற இராமனை அனைவரும் பாராட்டினர்.

மன்னர் இராமனிடம் “இராமா! நீ வைத்திருக்கும் திலகாஷ்ட மகிஷ பந்த என்ற நூலைப் பற்றி நானும் இதுவரை கேள்விபட்டதேயில்லை. அதை எங்களுக்கு காட்டு!” என்றார்.

இராமன் மூடியிருந்த பட்டுத்துணியை விலக்கினான். ஏடுகள் எதுவும் காணப்படவில்லை. அதற்கு பதிலாக எள், விறகு, எருமையை கட்டும் கயிறு இருந்தது. அதை கண்டதும் எல்லாரும் வியப்புற்றனர்.

இராமன், “அரசே! திலகம் என்றால் எள், காஷ்டம் என்றால் விறகு, மகிஷ பந்தனம் என்றால் எருமை கட்டும் கயிறு. இதன உட்பொருளை வைத்து தான் திலகாஷ்ட மகிஷபந்தனம் என்று சொன்னேன். இதைப்புரிந்து கொள்ளாத புலவர் பயந்து ஓடிவிட்டார்” என்று கூறிச்சிரித்தான். அனைவரும் சிரித்தனர். மன்னர் இராமனை பாராட்டி பரிசளித்தார்.

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய

நூலின்றிக் கோட்டி கொளல் - குறள் 401- அதிகாரம் 41- கல்லாமை

அறிவு நிரம்புவதற்குக் காரணமான நூல்களைக் கற்காமல் கற்றவரிடம் சென்று பேசுதல், சூதாடும் அரங்கு இழைக்காமல் வட்டுக்காயை உருட்டி ஆடுவதைப் போன்றது.

அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்

தொகையறிந்த தூய்மை யவர் - குறள் 711-அதிகாரம் 72- அவை அறிதல்

சொற்களின் தொகுதி அறிந்த தூய்மை உடையவர், அவைக்களத்தின் தன்மை அறிந்து ஏற்ற சொற்களை ஆராய்ந்து சொல்ல வேண்டும்.

ஒளியார்முன் ஒள்ளிய ராதல் வெளியார்முன்

வான்சுதை வண்ணங் கொளல்-- குறள் 714

அறிவிற் சிறந்தவரின் முன் தானும் அறிவிற் சிறந்தவராக நடந்து கொள்ள வேண்டும், அறிவில்லாதவர் முன் தாமும் வெண் சுண்ணம் போல் அறிவில்லாதவராய் இருக்க வேண்டும்.

கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்

சொற்றெரிதல் முன்னர் இழுக்கு - குறள் 717

குற்றமறச் சொற்களை ஆராய்வதில் வல்ல அறிஞர்களிடத்தில் பல நூல்களைக் கற்றறிந்தவரின் கல்வியானது நன்றாக விளங்கித் தோன்றும்.

கற்க கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.

# குறள் விருந்து



தி.பி.2053 ஆனி-10 திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ் பொ.ஆ.2022 சூன்-24

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்









குறளைக் கற்போம் குழந்தைகளே

குன்றெனப் புகழைக் குவிப்போமே

பிஞ்சு வயதினில் கற்றிடும் குறளால்

நெஞ்சில் நன்னெறி விதைப்போமே

சிறுவர்கள் பயிலும் குறள்நெறியால்

பெருமைகள் பலவும் சேர்ப்போமே

வள்ளுவர் தந்த வான்மறையால்

வாழ்வில் சிறப்புடன் உயர்வோமே

நாடும் வீடும் நலம் பெறவே

நாளும் குறளைக் கற்போமே

கசடறக் கற்றுத் தெளிவோமே

கற்றபின் அதன்வழி நிற்போமே

வல்லமை பெற்று உழைப்போமே

வல்லரசாக நாட்டை அமைப்போமே

சிறப்பாசிரியர்: மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன்

பொறுப்பாசிரியர்: திருமதி தாமரை சீனிவாசராவ்

ஆசிரியர்:மறைமலை இலக்குவனார்

சிறுவர் இலக்கியம்: குறள் விளக்க நாடகம்



# சிறிதளவு உதவியும் பேரளவு நன்றியும்

**பாவலர் முரசு நெடுமாறன்**

**(இந்தக் குறள் விளக்க நாடகத்தை இயற்றி வழங்கியவர் “ மலேசியாவின் அழ.வள்ளியப்பா “ “என்று பாராட்டப்படும் மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன் ஆவார்.மலேசியத் தொலைக்காட்சியிலும் வானொலியிலும் ஆயிரக்கணக்காகக் குழந்தைப் பாடல்களும் நாடகங்களும் படைத்து வழங்கிய வரலாற்றுச்சாதனையாளர் இவரே.. “மலேசியக் கவிதைக்களஞ்சியம் “என்னும் இவரது தொகுப்பு நூல் மலேசியாவில் இருநூறாண்டுகளாக வளர்ந்துவரும் தமிழ்க்கவிதையின் வரலாற்றைக் கூறுவது. தமது கவிதைப் பணிக்காகத் தமிழக அரசால் பாரதிதாசன் விருது வழங்கிச் சிறப்பிக்கப்பட்ட முதல் அயல்நாட்டவர்.)**

காட்சி 1

இடம் : பள்ளியின் தேர்வு அரங்கிற்கு முன்புறம்
நேரம் : காலை
கதைமாந்தர் : நகைமுத்து, பொற்கொடி

நிலை : நகைமுத்து தேர்வு எழுதுவதற்குரிய பென்சில், பேனா, அழிப்பான் போன்ற பொருள்களைக் கொண்டுவர மறந்து விட்டாள். அதனால் பெரும் கவலையுடன் நின்று கொண்டிருந்தான். நேரம் ஓட ஓட அழத்தொடங்கிவிட்டாள். அப்பொழுது பொற்கொடி அங்கு வருதல்.

பொற்கொடி : என்ன நகைமுத்து ஏன் அழுகிறாய்?

நகைமுத்து : இன்னும் கொஞ்ச நேரத்தில் நான் தேர்வு எழுத வேண்டும். ஆனால் என்னிடம் பென்சி, பேனா, அழிப்பான் போன்ற எதுவும் இல்லை. அப்பாவுடன் காரில் வந்தபோது நான் மறந்து அதை எடுக்காமல் வந்து விட்டேன். அப்பாவும் வெளியூர் போய் விட்டார். இந்தத் தேர்வை நான் கண்டிப்பாக எழுதியாக வேண்டும். இல்லா விட்டால்.....

பொற்கொடி : கவலைப்படாதே நகைமுத்து. கண்ணைத் துடைத்துக்கொள். நான் உதவுவேன். இந்தா இந்த டப்பாவில் எல்லாம் உள்ளன. இதை வைத்துக்கொள். மன உறுதியோடும் நம்பிக்கையோடும் தேர்வெழுது.

நகைமுத்து : உனக்கும் எழுதுபொருள் தேவைப்படுமே.



பொற்கொடி : இன்று எனக்குத் தேர்வு இல்லை. வகுப்பறையில் நண்பர்கள் உதவுவார்கள்.

நகைமுத்து : இந்த உதவியை நான் என்றென்றும் மறக்கவே மாட்டேன்.

பொற்கொடி : இது மிகச் சிறிய உதவிதானே. இதை ஏன் பெரிதுபடுத்துகிறாய்?

நகைமுத்து : “காலத்தி னால்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது” (102)
என்று திருவள்ளுவர் கூறியிருக்கிறாரே.

பொற்கொடி : இப்பொழுது கூட உனக்குத் திருக்குறள் நினைவுக்கு வருகிறதே.

நகைமுத்து : திருக்குறள் எப்பொழுதும் நினைவுக்கு வரவேண்டும். உதவி தேவைப்படும் நெருக்கடியான நேரத்தில் செய்யும் உதவி சிறியதாக இருந்தாலும், அது இந்த உலகத்தை விடப் பெரிதாகும் அல்லவா?

பொற்கொடி : நண்பர்களுக்கு உதவி செய்ய வேண்டுவது கடமைதானே!

நகைமுத்து : நீ சொல்லுவது சரிதான். பொதுவாக உதவுவது வேறு;

தக்க சமயத்தில் உதவுவது வேறு. எழுது பொருள்கள் உனக்கும் தேவைதானே. இருந்தாலும் என் நிலை உணர்ந்து நீ உதவ முன்வந்தது, என்றென்றும் மறக்க முடியாத பெரிய உதவி அல்லவா?

பொற்கொடி : சரிசரி. நீ திருக்குறள் பற்றிப் பேசத் தொடங்கினால் பேசிக் கொண்டே இருப்பாய். தேர்வுக்கு நேரம் நெருங்கி விட்டது, புறப்படு.

நகைமுத்து : நல்லது பொற்கொடி. உனக்கு மீண்டும் நன்றி.

பொற்கொடி : சரி, திருக்குறளை மட்டுமே நினைத்துக் கொண்டிராமல் கவனமாகத் தேர்வெழுது. உனக்கு நல்வாழ்த்துகள்.

(காட்சி முடிவு)

காட்சி 2

(சில மாதங்களுக்குப் பின்)

இடம் : பள்ளிக்கூடம்
நேரம் : காலை
கதைமாந்தர் : நகைமுத்து, செம்பியன்

நிலை : நகைமுத்து தன்தோழி பொற்கொடியைத் தேடுதல்; செம்பியனிடம் அவளைப்பற்றி உசாவுதல்.

நகைமுத்து : செம்பியன் பொற்கொடி எங்கே? நீண்ட நேரமாக அவளைக் காணமுடியவில்லையே!

செம்பியன் : என்ன நகைமுத்து உனக்கு எதுவுமே தெரியாதா?

நகைமுத்து : தெரியாது செம்பியன். அதனால்தான் உன்னைக் கேட்கிறேன்.

செம்பியன் : பொற்கொடியின் அப்பா வேலைக்குச் சென்ற போது, விபத்தில் சிக்கிப் படுகாயம் அடைந்து விட்டார். நல்ல வேளை பிழைத்துக் கொண்டார்.

நகைமுத்து : இப்பொழுது எங்கிருக்கிறார்?

செம்பியன் : அவர் இப்பொழுது மருத்துவ மனையில் இருக்கிறார்.

நகைமுத்து : எந்த மருத்துவமனையில் இருக்கிறார்?

செம்பியன் : அரசு பொது மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வருகிறார். எங்கள் வீட்டிற்கு அருகில்தானே அவர்கள் வீடு. அதனால் எனக்கு உடனடியாகத் தெரிந்தது.



நகைமுத்து : பொற்கொடியின் அம்மா?

செம்பியன் : அந்த அம்மா ஒரு நோயாளி. எங்கும் செல்ல முடியாமல் வீட்டில்தான் இருக்கிறார்.

நகைமுத்து : பொற்கொடி எங்கே?

செம்பியன் : அவள் மருத்துவ மனையில் அப்பாவைக் கவனித்துக் கொண்டிருக்கிறாள்.

நகைமுத்து : நீ போய்ப் பார்த்தாயா?

செம்பியன் : இன்று பள்ளி முடிந்து வீடு திரும்பியதும் அப்பாவுடன் சென்று அவரைப் பார்ப்பேன்.

நகைமுத்து : நானும் என் பெற்றோருடன் சென்று பார்க்க வேண்டும்.

செம்பியன் : சரி, இடைவேளை முடியப் போகிறது. வகுப்பிற்குச் செல்லலாம்.

(காட்சி முடிவு)

காட்சி 3

இடம் : நகைமுத்து இல்லத்தின் ஒருபகுதி
நேரம் : மாலை
கதைமாந்தர் : நகைமுத்து, அவள் தந்தை பூமாணிக்கம், அன்னை பொன்மணி
நிலை : நகைமுத்து தன்தோழி பொற்கொடியின் தந்தையை மருத்துவமனையில் சென்று பார்த்து வரவும் அவர்களுக்கு வேண்டிய உதவிகள் செய்யவும் பெற்றோரை வலியுத்துதல்.

பொன்மணி : என்ன நகைமுத்து, ஏன் இப்படி பரபரப்பாக ஓடி வருகிறாய்?

பூமாணிக்கம் : அதுதானே! என்ன நடந்தது? உன் முகம் வேறு வாடிப்போய் இருக்கிறது.

பொன்மணி : சொல் நகைமுத்து. கண்வேறு கலங்கிக் கொண்டிருக்கிறது.

நகைமுத்து : என் உயிர்த்தோழி பொற்கொடி.....

பூமாணிக்கம் : அவளுக்கு என்ன?

நகைமுத்து : அவளுக்கு ஒன்றுமில்லை. அவளுடைய அப்பா.....

பொன்மணி : அவருக்கு என்ன? சொல்லம்மா.

நகைமுத்து : அவர் விபத்தில் சிக்கிப் படுகாயம் அடைந்து, மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டிருக்கிறார்.

பூமாணிக்கம் : நல்ல வேளை, உயிர்பிழைத்துக் கொண்டாரே!

பொன்மணி : உன் தோழி பொற்கொடி எங்கிருக்கிறாள்?

நகைமுத்து : அவள் மருத்துவ மனையில் தன் தந்தையைக் கவனித்துக் கொண்டிருக்கிறாள்.

பொன்மணி : சரிசரி. நீ வந்து சாப்பிடு.

நகைமுத்து : நான் எப்படிச் சாப்பிட முடியும்?

பொன்மணி : என்ன? பட்டினி கிடக்கப் போகிறாயா?

நகைமுத்து : நாம் அவர்களுக்கு உதவ வேண்டும்.

பூமாணிக்கம் : உதவிதானே! செய்தால் போகிறது. டிரைவரிடம் இருநூறு வெள்ளி கொடுத்தனுப்பி அவர் வீட்டில் கொடுக்கச் சொல்கிறேன்.

நகைமுத்து : என்னப்பா சொல்கிறீர்கள்? உங்கள் இருநூறு வெள்ளி, அவரைத்தூக்கி நிறுத்தி விடுமா? இதுபோன்ற நேரங்களில் உதவப் பலர் முன்வருவார்கள். நான் உடனடியாக மருத்துவ மனைக்குப் போக வேண்டும்.

பூமாணிக்கம் : நான் வரமுடியாது வியாபாரத்தை முன்னிட்டு நான் வெளியூர் போக வேண்டும். நான் கண்டிப்பாக வரமுடியாது.

நகைமுத்து : சரி, நீங்கள் போகலாம். நான் போய்ப் பார்த்து வருவேன்.

பூமாணிக்கம் : நீ எப்படிப் போவாய்?

நகைமுத்து : பேருந்தில் செல்வேன்.

பொன்மணி : என்னடி சொல்கிறாய்? எவளோ ஒருத்திக்காக இப்படிப் பிடிவாதம் செய்கிறாயே.

நகைமுத்து : என்ன? அவள் எவளோ ஒருத்தியா? நெருக்கடியான நேரத்தில் எனக்கு உதவியவள்!

பூமாணிக்கம் : அது என்ன அவ்வளவு பெரிய உதவியா? தேர்வு எழுத ஒரு பழைய பேனாவைக் கொடுத்தாள். அதற்கு.....

நகைமுத்து : அந்தப் பழைய பேனாதான் நான் தேர்வு எழுதி தேர்ச்சிபெற உதவியது. அது நெருக்கடியான நேரத்தில் செய்த உதவி.

“தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்” (104)

என்றார் திருவள்ளுவர். தினை சிறிய தானியம்; பனை பெரிய பழம். தினை அளவு நன்றி செய்யினும் அதனைப் பனைஅளவு உதவியாக கருத வேண்டும்.

பொன்மணி : எதற்கெடுத்தாலும் உனக்குத் திருக்குறள் தானா?

நகைமுத்து : ஒரு நாளைக்கு ஒரு குறள் மனப்பாடம் செய்ய வேண்டுமென்று எனக்கு நீங்கள்தானே கூறினீர்கள். நான் கூறியது 'செய்ந் நன்றி அறிதல்' என்னும் 11ஆம் அதிகாரத்தில் உள்ள குறள்தான்.

பூமாணிக்கம் : சரி, முதலில் நீ சாப்பிடு. பிறகு பேசிக்கொள்ளலாம்.

நகைமுத்து : ஒரு முடிவு தெரியாமல் நான் சாப்பிடமாட்டேன்.

பொன்மணி : நீ என்னதான் சொல்கிறாய்!

நகைமுத்து : என் தோழியையும் அவள் தந்தையையும் மருத்துவமனையில் சென்று பார்த்து வரவேண்டும். அவள் அம்மாவை வீட்டில் போய்ப் பார்த்து ஆறுதல் சொல்ல வேண்டும்; அவர்களுக்கு உதவவும் வேண்டும்.

பொன்மணி : சரி. அப்பா வெளியூர் செல்லட்டும். நன் உன்னை அழைத்துச் செல்வேன்.

நகைமுத்து : சும்மா பார்த்து வருவதோடு விட்டு விடக்கூடாது.

பூமாணிக்கம் : அவர்களுக்கு என்னதான் செய்யவேண்டும்? அதையாவது சொல்.

நகைமுத்து : பொற்கொடி அப்பா நலம் பெற்று வேலைக்குத் திரும்பும் வரை அவர்களுக்கு நாம் உதவி வர வேண்டும். ஏன் வாயடைத்துப் போய்விட்டீர்கள். முடியாதென்றால் சொல்லிவிடுங்கள். பள்ளிக்கு எடுத்துச் செல்லும் உணவை நான் என் தோழிக்குக் கொடுத்துவிடுவேன்.

பொன்மணி : அடேயப்பா! நீ அவ்வளவு பெரிய தியாகியா?

நகைமுத்து : "செய்யாமல் செய்த உதவிக்கு வையமும்
வானகமும் ஆற்றல் அரிது" (101)
என்றார் திருவள்ளுவர்.

பொன்மணி : ஆம். நாம் எந்த ஓர் உதவியும் செய்யாமல் இருக்கும் பொழுது மற்றவர்கள் தாமே முன்வந்து செய்யும் உதவிக்கு, இந்த மண் உலகையும், அந்த விண்ணுலகையும் கொடுத்தாலும் ஈடாக முடியாது என்று திருவள்ளுவர் கூறுகிறார்.

பூமாணிக்கம் : என்ன நீயும் மகளோடு சேர்ந்து கொண்டாயா?.
ம்..... சரிசரி. நீ சொல்லும் உதவிகளையெல்லாம் அந்தக் குடும்பத்திற்குச் செய்யலாம். பொற்கொடியின் கல்விச் செலவு முழுவதையும் ஏற்றுக் கொள்ளலாம்.

பொன்மணி : என்ன நகை. மகிழ்ச்சிதானே?

நகைமுத்து : எனக்கு அளவில்லாத மகிழ்ச்சி. நல்ல அப்பா. நல்ல அம்மா. வாருங்கள் சாப்பிடலாம்!

நாடகம் நிறைவு.

## தீயவை தீய பயத்தலால்......



--திருமதி.தாமரை சீனிவாசராவ்

இந்த இதழின் பொறுப்பாசிரியர்.சிறந்த எழுத்தாளர்.பேச்சாளர்.
கம்போடியாவில் செயற்பட்டுவரும் ஆங்கோர்த் தமிழ்ச் சங்கத்தின் பொருளாளர்.

.

நம்முடைய செயல்களே நாம் யார் என்பதை இவ்வுலகிற்குக் காட்டும்.நாம் செய்யும் நன்மைகளுக்கு ஏற்ப நல்வினையும்,தீய செயல்களுக்கு ஏற்ற பலனும், எதையும் ஆராயாமல்,அவசரத்திலும்,ஆத்திரத்திலும் எடுக்கும் முடிவுகள்,பல துன்பங்களையும், ஆபத்துக்களையும் தந்து விடுகிறது.முக்கிய பொறுப்பில் உள்ளவர்களுக்கு, தன்னை நம்பி இருப்பவர்களை காப்பாற்றவும், வழிகாட்டவும் இருப்பவர்களுக்கு கூடுதல் கவனம் தேவைப்படுகிறது.

அப்படி மறந்து செயல்படுவோருக்கு,தீமை விளைவிக்க நினைப்போருக்கு,தாமும் கெடப் போகிறோம் என்பதை அறிந்து கொள்ள வேண்டும். நம் ஒவ்வொரு செயலும்,நேரெதிர் விளைவுகளை ஏற்படுத்தும் என்பதை கருத்தில் கொண்டு நிதானமாகச் செயல்படுவது, நன்மையைத் தரும் என்பதில் எந்த ஐயமும் இல்லை.

அமுதன் ஒரு பள்ளிக் கூடத்தில் பயின்று வந்தான்.படிப்பில் மட்டுமல்லாது இதர விளையாட்டு மற்றும் அனைத்துச் செயல்பாடுகளிலும்,முன்னணியில் நிற்கும் மாணவனாக திகழ்ந்தான்.மற்ற மாணவர்களுக்கும் நல்ல நண்பனாக திகழ்ந்தான்.உடன் படிக்கும் மாணவர்களுக்கு ஏற்படும் சந்தேகங்கள் ஆகியவற்றிற்கு சொல்லிக் கொடுத்து உதவி செய்வான்.

ஆசிரியருக்குப் பிடித்த மாணாக்கனாகத் திகழ்ந்தான்.கல்வி தவிர மற்ற அனைத்து வேலைகளையும் கீழ்ப்படிந்து செய்வதால் ஆசிரியர்கள் அனைவரும் அறியும்படி இருந்தான். மதிப்பெண் பெறுவதை விட நல்ல ஒழுக்கத்தையும்,நன்னடத்தையும் பெரியவர்களிடமிருந்தும், ஆசிரியர்களிடமிருந்தும் கற்றல் முக்கியமான ஒன்று என அவன் பெற்றோர் அடிக்கடி கூறுவதை வகுப்பில் கூறிக் கொண்டே இருப்பான்.

"நீ என்ன ஆசானாக வரப் போகிறாயா ? எப்போதும் ஏதாவது அறிவுரை கூறிக் கொண்டே இருக்கிறாயே" என்று சில மாணாக்கர் அவனைக் கேலி,கிண்டல் செய்வதும் உண்டு.அதையெல்லாம் அவன் சிரித்துக் கொண்டே 'ஆமாம்,ஆமாம்' எனத் தலையாட்டிக் கொண்டே செல்வான்.

கோபி என்ற உடன்படிக்கும் மாணவன் அமுதன் மீது சிறு பொறாமையுடன், பார்த்துக் கொண்டிருந்தான்.இவன் மட்டும் தான் நல்ல மாணாக்கனா? ஏன்? நானெல்லாம் நன்றாகப் படிக்கவில்லையா?ஏன் ஆசிரியர்கள் அனைவரும் அமுதனையே அழைக்கிறார்கள்,என்று கோபம் கொண்டான்.ஏதாவது ஒரு சூழ்நிலையில் ஆசிரியர்களிடம், அவனை மாட்டி விட வேண்டும் என்று சிந்தித்துக் கொண்டே இருந்தான்.பொறாமை என்னும் தீய எண்ணம்,அவன் நற்குணங்களை மறைத்தது.படிப்பிலும் கவனம் சிதறியது.

சில நாட்களாக அவனது செயல்களைக் கவனித்த அவனது ஆசிரியர், "கோபி,என்னாச்சு உனக்கு? மதிப்பெண் எல்லாம் குறைகிறது.உன் கவனம் படிப்பில் இருப்பதாகத் தெரியவில்லையே?" என்றார். 'அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை' என்று கூறிச் சமாளித்தான்.ஆனாலும் அவனுக்கு அமுதன் மீதிருந்த கோபம், பொறாமை குறையவில்லை.ஏதாவது ஒரு தவறு செய்ய வைத்து ஆசிரியர்களிடம் வசமாக மாட்டி விட வேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டிருந்தான்.

நம் நிலை தவறி காழ்ப்புணர்வு,கோபம்,பொறாமை எண்ணம் ஆகியவை மேலோங்கும் போது,தவறான எண்ணங்கள் தோன்றுவதும், முடிவுகள் தீய விளைவுகளை உண்டாக்கி நம் அறிவுக் கண்ணை மூடி நமக்கே தீங்கும் விளைவிக்கும்.இதை அறியாமல் அவசரப்பட்டு நாம் செய்யும் காரியங்கள் நமக்கே தீங்கு விளைவிக்கின்றன. இப்படித்தான் சில நாட்கள் கழித்து தேர்வு நடைபெற்றது.ஆசிரியர் வழக்கம் போலத் திருத்தம் செய்வதற்காக விடைத்தாள்களை தன் வீட்டில் ஒப்படைக்குமாறு கூறிவிட்டுச் சென்றார்.அப்போது பிடிவாதமாக 'நானும் உனக்கு உதவி செய்கிறேன்' என்று,மீண்டும் மீண்டும் வலியுறுத்தி கூறினான் கோபி.

அமுதனோ "எனக்கு ஒன்றும் சிரமம் இல்லை கோபி,வழக்கமாக நான் தானே செய்கிறேன்! தவிர இதில் நம் வகுப்பு மட்டுமல்லாது,பிற வகுப்புகளுடைய தேர்வுத் தாள் கட்டுகள் உள்ளது.நான் தானே ஆசிரியர் வீட்டைக் கடந்து செல்ல வேண்டும்..நானே தந்து விடுகிறேன்" என்றான். அதற்கு கோபியோ, "சரிப்பா நீயே எல்லா வேலையும் செய்து கொள்.அப்போ தான் பள்ளியிலே நீதான் நல்ல பிள்ளைன்னு பெயர் வாங்கலாம்" என்று முகம் சுளித்தான்.உடனே அமுதன், "அப்படி இல்லையடா,சரி வா நாம் சேர்ந்தே எடுத்துச் செல்வோம்" என்று கூறி,தேர்வுத் தாள்களைக் கட்டி எடுத்துக் கொண்டு கிளம்பினர்.அப்போது சில தேர்வுத் தாள்களை மறைத்து வைத்து,ஆசிரியரிடம் அமுதனை மாட்டி விட எண்ணினான்.சில தேர்வுத் தாள்களை எடுத்து மறைத்து விட்டு,நல்லவன் போல அவனுடன் சென்றான்.

ஆசிரியர் வீட்டிலும் ஒப்படைத்து விட்டனர்.பிறகு ஆசிரியர் சரி பார்த்த போது தேர்வுத் தாள் குறைந்தது கண்டு அதிர்ச்சியடைந்து அமுதனைக் கூப்பிட்டு விசாரித்தார். "என்ன அமுதா,இப்படி கவனக் குறைவாக நடந்து கொண்டாயே,உன்னை நம்பித் தானே பொறுப்பை ஒப்படைத்தேன்? இப்படி செய்துவிட்டாயே" என்று கடிந்து கொண்டார்.

அமுதனுக்கோ ஒன்றும் புரியவில்லை. "இல்லை ஐயா,நான் பத்திரமாகத் தான் கொண்டு வந்தேன்,என்னவாயிற்று என்று தெரியவில்லை" என்று கலங்கினான்.ஆனால் கோபியோ

வாயை வைத்துக் கொண்டு சும்மா இல்லாமல்,சக மாணவர்களிடம், 'டேய் கேட்டியா,இந்த பள்ளியின் செல்லப்பிள்ளை வசமா ஒரு தவறு செய்து மாட்டிக்கிட்டாரு' என்று ஏளனம் பேசிச் சிரித்தான்.என்னவாயிற்று என்று மற்ற மாணவர்கள் கேட்க,தேர்வுத் தாள் தொலைந்த செய்தியைச் சொல்லிச் சிரித்துக் கொண்டிருந்தான்.ஆசிரியர் காதுக்கும் எட்டியது.

உடனே கோபியை கூப்பிட்டு, "இங்க வா,உனக்கு எப்படி தேர்வுத் தாள் தொலைந்து போனது தெரியும்?" என்று கூப்பிட்டு மிரட்டினார்.பயந்து கொண்டே "இல்ல சார்,நான் அப்படி எதுவும் சொல்லலயே" என்று மீண்டும் பொய் சொன்னான்.அவனது உளறலில் உண்மையை அறிந்த ஆசிரியர்,சொல்கிறாயா? இல்லை தலைமை ஆசிரியரிடம் உன்னை,அழைத்துச் செல்லவா என்று மிரட்டினார்.மேலும் "நீ நாளை வரும் போது உன் தந்தையை அழைத்துக் கொண்டு வா" என்றார்.

பயந்து போய்,தான் வசமாக மாட்டிக் கொண்டோம் என்று நினைத்து, "சார் என்னை மன்னித்து விடுங்கள்.நான் செய்தது மிகப் பெரிய தவறு தான்,அமுதன் மேலிருந்த கோபத்தில்,அவனுக்கு உங்களிடம் கெட்ட பெயர் வாங்கித் தர வேண்டும் என்று நினைத்து நான் தான் தேர்வுத் தாளை ஒளித்து வைத்தேன்" என்றான். "இனி இப்படிச் செய்ய மாட்டேன்,பெற்றோரிடம் கூற வேண்டாம்" என்று அழுது புலம்பினான். "மன்னிக்கவே முடியாது,எவ்வளவு பெரிய தவறைச் செய்திருக்கிறாய்,நல்ல பிள்ளை,நன்றாகப் படிக்கக் கூடியவன் என்று நினைத்தால் இப்படி செய்துவிட்டாயே..உனக்கு நீயே அவமானத்தைத் தேடிக் கொண்டாயே" என்று திட்டினார். "ஒரே வகுப்பில் இருக்கும் மாணவர்களுக்குள் இப்படிப் பொறாமை வரலாமா?நீ இழைத்த தவறுக்கு அமுதன் எவ்வளவு சங்கடப்பட்டான் தெரியுமா?வகுப்பில் மாணவர்கள் முன் அவனிடம் மன்னிப்புக் கேள்" என்றும் கட்டளையிட்டார்.

தனது தீய எண்ணம் தனக்கே எவ்வளவு பெரிய தீங்கை விளைவித்துவிட்டது என்று எண்ணி,வகுப்பறையில் தலை குனிந்து நின்றான் கோபி.

நமது நேர்மறையான எண்ணங்களும்,நற் குணங்களும்,சிறு தவறால் கூட களங்கம் விளைவித்து விடும் என்பதே குறள் கூறும் நீதி.

கெடுவல்யான் என்பது அறிகதன் நெஞ்சம்
நடுவொரீஇ அல்ல செயின்.- குறள் எண் : 116- நடுவு நிலைமை

## ‘ஆன்ற குடிப்பிறத்தல்’

ஆசிரியரின் வேட்டி :

ஆசிரியர் ஒருநாள் தனது வேட்டியைத் துவைத்து கொடிக்கயிற்றில் காயப் போட்டுவிட்டுப் பள்ளிக்குச் சென்றார். பிறகு வந்து பார்த்தபோது வேட்டியைக் காணவில்லை. ஊராரில் சிலர் சிகாமணிதான் எடுத்திருப்பார் என்று சந்தேகத்துடனும் சிலர் உறுதியுடனும் கூறினர். சிகாமணியின் தந்தையும் பிறர் பொருளை எடுத்துக் கொள்ளும் குணம் கொண்டவர். அதனால் அவரது பழக்கம் இவரைத் தொற்றிக் கொண்டது என்றனர்.



வகுப்பறையில் ஆசிரியர் :



ஆசிரியருக்கு வேட்டியின் மாயம் விளங்கவில்லை. அன்று வகுப்பறையில் ‘பண்புடைமை’ என்ற அதிகாரத்திலுள்ள குறட்பாவை நடத்தத் தொடங்கினார். ‘ஆன்ற குடிப்பிறத்தல்’ என்ற தொடருக்குப் பொருள் கூறும்போது வகுப்பிலிருந்த சிகாமணியின் மகன் சகாதேவன் ஆசிரியரைக் கூர்ந்து நோக்கினான். ஆசிரியரும் அவனை அடிக்கடி பார்த்தார்.

குறள்வழி அறிவுரை :

‘ஆன்ற குடிப்பிறத்தல்’ என்றால் சிறந்த குடி உன்னிடமிருந்து தொடங்கட்டும். அப்பன் திருடனாயிருக்கலாம். மகன் நல்லவனாக இருப்பான். அவங்க அப்பனைச் சொல், திருடன்தான்! அவன் பையனைச் சொல்லாதே, அவன் மிக நல்லவன் என்று உலகோர் பேசுவர். அதுபோல் கெட்ட பழக்கங்கள் தந்தையுடன் செல்லட்டும். உன்னிலிருந்து நல்ல

புதிய குடி உதிக்கட்டும்” என்றார். மேலும் “ஒழுக்கம் இல்லாத பரம்பரையில் நீ வந்திருந்தாலும் ஒழுக்கத்தின் உறைவிடமாக நீ இருக்கவேண்டும்” என்று கூறினார்.

உணவு இடைவேளை :

உணவு இடைவேளையில் ஆசிரியர் வீட்டிற்குச் சென்றார். அப்போது மூர்த்தி என்ற மாணவன் சகாதேவன் கொடுக்கச் சொன்னதாக வேட்டியைக் கொடுத்தான். பிறகு வேட்டியைச் சிகாமணிதான் எடுத்தார் என்றும் தானே ஆசிரியரிடம் கொடுப்பதற்கு வெட்கப்படுவதாகவும், சகாதேவன் கூறியதாகக் கூறினான்.

உண்மை அறிந்த ஊரார் :

சிகாமணிதான் திருடன் என அறிந்ததும் ஊரார் அவரைத் தண்டிக்கத் தொடங்கினர். ஆசிரியர் தடுத்துவிட்டார். சிகாமணியைத் தண்டித்தால் அவன் அவனுடைய மகனான சகாதேவனைத் தண்டிப்பான். அதனை சகாதேவன் நேர்மைக்குக் கிடைத்த பலனாகக் கருதி வருந்துவான் என்று தடுத்தமைக்குக் காரணம் கூறினார்.

மறுத்த ஊரார் :

“அவனைவிடக்கூடாது சார்!” என்று கடைசிவரை ஒருவர் சொல்லிக்கொண்டே இருந்தார். ஆனால் ஆசிரியர் இறுதியில் “நீங்கள் தண்டனைதான் கொடுக்க வேண்டுமெனில், நான் என் வேட்டியே திருடு போகவில்லை என்று கூறுவேன்” என்றார்.

முடிவுரை :

ஒருவிதமாக ஊரார் ஆசிரியரின் கருத்தைப் புரிந்து கொண்டனர். சிகாமணி, சகாதேவன், ஆசிரியர் மூவரும் நிம்மதிபெற்றனர்.

குறள் :

உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்.- குறள் 140-ஒழுக்கமுடைமை

உலகத்து உயர்ந்தவரோடு பொருந்த ஒழுகும் முறையைக் கற்காதவர், பல நூல்களைக் கற்றிருந்த போதிலும் அறிவில்லாதவரே ஆவர்.

# ஏமாந்த சிறுத்தை

– கிழக்கு ஆப்பிரிக்கக் குட்டிக் கதை

ஒரு நாள் சிறுத்தை பசியுடன் உணவைத் தேடியது. அப்போது ஒரு கறுப்பு மானையும் மற்றொரு புள்ளி மானையும் கண்டது.

அவை இரண்டும் மலையடிவாரத்தில் மேய்ந்து கொண்டிருந்தன. சிறுத்தை மிகுந்த எச்சரிக்கையுடன் மலையடிவாரத்தருகே சென்றது. ஆனால் எதனைத் தாக்குவது என அது முடிவு செய்யவில்லை.

அதே நேரத்தில் சிறுத்தையைப் பார்த்த மான்கள் இரண்டும் வேகமாக ஓடின. பிறகு அவை இரண்டும் ஒரு இடத்தில் இடது வலது பாதைகளில் ஓடின.



சிறுத்தை அந்த இடத்துக்கு வந்தது. 'எதைத் துரத்தலாம்' என்று தயங்கி நின்றது. பிறகு, 'சரி.. கறுப்பு மானைத் துரத்தலாம். அதன் இறைச்சிதான் சுவையாக இருக்கும்' என்று முடிவு செய்து கறுப்பு மானைத் துரத்தத் தொடங்கியது. ஆனால் அதற்குள் அது தொலைதூரம் ஓடிப் போய் விட்டது.

உடனே சிறுத்தை "அது வேகமாக ஓடக் கூடிய மான். அதைப் பிடிக்க முடியாது. பசி வேறு அதிகமாகி விட்டது. சரி… புள்ளி மானைப் பிடிக்கலாம்" என்று தீர்மானித்து மற்ற பாதையில் ஓடியது. ஆனால் புள்ளிமான் எப்போதோ பஞ்சாய்ப் பறந்துவிட்டிருந்தது.

முக்கியமான நேரத்தில் முக்கியமான முடிவை விரைவாக எடுக்க வேண்டும்.

**சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு**
**தாழ்ச்சியுள் தங்குதல் தீது.-குறள் 671- வினைசெயல்வகை**

ஆராய்ந்து எண்ணுவதற்கு எல்லை துணிவு கொள்வதே ஆகும், அவ்வாறு கொண்ட துணிவு காலந் தாழ்த்து நிற்பது குற்றமாகும்.

கற்க கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.

# குறள் விருந்து



தி.பி.2053 ஆடி-8 திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ் பொ.ஆ.2022 சூலை-24

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்









குறளைக் கற்போம் குழந்தைகளே

குன்றெனப் புகழைக் குவிப்போமே

பிஞ்சு வயதினில் கற்றிடும் குறளால்

நெஞ்சில் நன்னெறி விதைப்போமே

சிறுவர்கள் பயிலும் குறள்நெறியால்

பெருமைகள் பலவும் சேர்ப்போமே

வள்ளுவர் தந்த வான்மறையால்

வாழ்வில் சிறப்புடன் உயர்வோமே

நாடும் வீடும் நலம் பெறவே

நாளும் குறளைக் கற்போமே

கசடறக் கற்றுத் தெளிவோமே

கற்றபின் அதன்வழி நிற்போமே

வல்லமை பெற்று உழைப்போமே

வல்லரசாக நாட்டை அமைப்போமே

சிறப்பாசிரியர்: மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன்

பொறுப்பாசிரியர்: திருமதி தாமரை சீனிவாசராவ்

ஆசிரியர்:மறைமலை இலக்குவனார்

சிறுவர் இலக்கியம்: குறள் விளக்க நாடகம்



# ஆறிடும் ‘புண்’ணும் ஆறாத’வடு’வும்

**பாவலர் முரசு நெடுமாறன்**

**(இந்தக் குறள் விளக்க நாடகத்தை இயற்றி வழங்கியவர் “ மலேசியாவின் அழ.வள்ளியப்பா “ “என்று பாராட்டப்படும் மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன் ஆவார்.மலேசியத் தொலைக்காட்சியிலும் வானொலியிலும் ஆயிரக்கணக்காகக் குழந்தைப் பாடல்களும் நாடகங்களும் படைத்து வழங்கிய வரலாற்றுச்சாதனையாளர் இவரே.. “மலேசியக் கவிதைக்களஞ்சியம் “என்னும் இவரது தொகுப்பு நூல் மலேசியாவில் இருநூறாண்டுகளாக வளர்ந்துவரும் தமிழ்க்கவிதையின் வரலாற்றைக் கூறுவது. தமது கவிதைப் பணிக்காகத் தமிழக அரசால் பாரதிதாசன் விருது வழங்கிச் சிறப்பிக்கப்பட்ட முதல் அயல்நாட்டவர்.)**

காட்சி : 1

நேரம் : மாலை

கதை மாந்தர் : அருளரசு (அண்ணன்) , கயல்விழி (தங்கை), கதிரவன் (மாமா) மதிமுகம் (அத்தை)

நிலை : அருளரசும் அவன் தங்கை கயல்விழியும் தங்கள் மாமா வீட்டிற்குச் செல்லல். கயல்விழி வழியில் தடுக்கி விழல். காலில் காயம் ஏற்படுதல்.

கயல்விழி : அண்ணா , மாமா வீட்டிற்குச் செல்வது எத்துணை மகிழ்ச்சியாக இருக்கிறது தெரியுமா?

அருளரசு : ஆமாம் கயல்விழி. நம் வீட்டிலிருந்து மாமா வீடு அருகில் இருப்பதால் நடந்தே செல்ல முடிகிறது.

கயல்விழி : அந்தி நேரம். வெயில் கடுமையாக இல்லை.

அருளரசு : மெல்லிய காற்றும் வீசுகிறது. சாலையின் இருபக்கங்களிலும்
அழகான மரங்கள் நிழல் தருகின்றன. இந்த இனிய சூழலில்
நடப்பது நல்ல பயிற்சியும் தரும்.

அருளரசு : நடப்பது நல்ல பயிற்சியும் ஆகும்.

கயல்விழி : ஆமாம் அண்ணா. நீங்கள் செய்வது சரிதான். ...ம்....
அதோ மாமா வீட்டை நெருங்கி விட்டோம்.

அருளரசு : கவனமாக நடந்து வா. சாலையின் சில இடங்களில்
பழுதடைந்திருக்கிறது (சொல்லி முடிப்பதற்குள்).

கயல்விழி : ஐயோ அம்மா! (கயல்விழி சிறுகுழியில் கால் பதிந்து
கீழே விழுதல்).

அருளரசு : என்ன கயல்விழி!... அடடா...கீழே விழுந்து விட்டாயா ?

கயல்விழி : ஆமாம் அண்ணா. தெரியாமல் குழியில் கால் வைத்ததால்
கீழே விழுந்து விட்டேன்.

அருளரசு : காலில் காயம் ஏற்பட்டுக் குருதிவழிந்து கொண்டிருக்கிறதே!

கயல்விழி : வலி தாங்க முடியவில்லை அண்ணா.

அருளரசு : வருந்தாதே. நான் முதல் உதவி செய்வேன். நீ மெதுவாக
நடந்துவா. மாமாவும் அத்தையும் கவனித்துக்
கொள்வார்கள்.

கயல்விழி : சரி அண்ணா. நான் மெதுவாக நடப்பேன்.

அருளரசு : இன்னும் சிறிது தூரம்தான். ஐந்தே மணித்துளிகளுக்குள்

சென்று விடலாம். (இருவரும் நடத்தல்)

காட்சி முடிவு

காட்சி 2

இடம் : வீட்டின் வரவேற்பு அறை

கதைமாந்தர் : அருளரசு , கயல்விழி, கதிரவன், மதிமுகம்.

நிலை : அத்தையும் மாமாவும் கயல்விழி நிலைக்கு வருந்தி அவளுக்குச் சிகிச்சை அளித்தல்.

மதிமுகம் : வா அருளரசு , வா கயல்விழி. நீ ஏன் நொண்டுகிறாய்? காலில் குருதிவேறு கசிகிறது.

கதிரவன் : ம்...ஆமாம். வரும் வழியில் என்ன நடந்தது ?

அருளரசு : கயல்விழி வரும் வழியில் விழுந்துவிட்டாள். அதனால் சிறு காயம் ஏற்பட்டு விட்டது.

கயல்விழி : சாலை கொஞ்சம் பழுதடைந்திருந்தது. நான் நடந்து வந்தபொழுது தவறுதலாக ஒரு குழியில் கால் வைத்துவிட்டேன்.

அருளரசு : அதனால் கீழே விழ நேர்ந்தது ; காலில் காயம் பட்டுவிட்டது.

மதிமுகம் : நல்ல வேளை முதல் உதவி செய்திருக்கிறாய்.
நான் கொஞ்ச நேரத்தில் கழுவி மருந்து கட்டுகிறேன்.

கதிரவன் : இப்பொழுதே மருத்துவ மனைக்குச் செல்லலாமே.

மதிமுகம் : நான் மருத்துவத்தாதி அல்லவா ? கடுமையாக எதுவும் நடந்துவிட வில்லை. தேவை எனில் மருத்துவரிடம் செல்லலாம்.

கதிரவன் : என்ன கயல்விழி ? கால் வலிக்கிறதா?

கயல்விழி : இல்லை மாமா. அத்தை மருந்து வைத்துக் கட்டுப் போட்டதும் வலி நின்று விட்டது.

கதிரவன் : சரி , வாருங்கள் முதலில் சிற்றுண்டி அருந்தலாம்.

மதிமுகம் : சிற்றுண்டி தயாராக இருக்கிறது. எல்லாரும் இங்குவந்து அமருங்கள் (அனைவரும் சிற்றுண்டி அருந்துதல்).

காட்சி முடிவு

காட்சி 3

இடம் : வீட்டின் ஒருபகுதி
நேரம் : இரவு
கதைமாந்தர் : கதிரவன் , மதிமுகம், அருளரசு, கயல்விழி
நிலை : கதிரவன் திருக்குறள் விளக்கம் தருதல்.

கதிரவன் : கயல்விழிக்குக் கடுமையாக எதுவும் ஆகவில்லை. அதனால் நமக்கு மகிழ்ச்சி.

மதிமுகம் : ஆமாம்! மருத்துவரும் அஞ்சத் தேவையில்லை என்று கூறிவிட்டார். காலில் ஏற்பட்ட புண்விரைவில் ஆறிவிடும்.

அருளரசு : மாமா நீங்கள் என்ன நடந்தாலும் அது பற்றி ஒரு திருக்குறள் கூறி விளக்கம் தருவீர்கள்.

கதிரவன் : ஆம்! இன்று நடந்தது பற்றியும் ஓரிரு திருக்குறள் பாக்களைச் சொல்லி விளக்க எண்ணுகிறேன்.

கயல்விழி : நீங்கள் திருக்குறள் விளக்கம் தர முன் வந்ததும் என் கால் வலி முற்றாகப் பறந்து போய்விட்டது.

மதிமுகம் : எனக்கும் நல்ல விருந்துதான் ம்... சொல்லுங்கள்.

கதிரவன் : திருவள்ளுவர் இருவகையான புண்களைப் பற்றிக் கூறுகிறார்.

அருளரசு : என்ன ? புண்களில் இரண்டு வகைகளா?

கயல்விழி : அதுதானே ? நம் கைகால்களில் புண் ஏற்படுகிறது. இப்பொழுது என் காலில் புண் ஏற்பட்டுள்ளது. இன்னொரு வகையான புண் எது?

கதிரவன் : மனத்தில் ஏற்படும் புண்.

அருளரசு : என்ன ? மனத்தாலும் புண் ஏற்படுமா?

கதிரவன் : ஏற்படும். அது வில் அம்பால் ஏற்படுவது அன்று. சொல் அம்பால் ஏற்படுவது.

கயல்விழி : வில்லம்பு , சொல்லம்பு. எதுவும் விளங்கவில்லையே. மாமா, எங்களுக்குப் புரியும்படி விளக்குங்கள்.

கதிரவன் : வில்லம்பு என்பது வில்லிருந்து விடப்படும் கொலைக் கருவி. அது உடம்பில் பட்டுப் புண் ஏற்படுத்தும்.

அருளரசு : சொல்லம்பு பற்றிச் சொல்லுங்கள்.

கதிரவன் : நாம் பேசும் சொல் இருக்கிறதே , அதற்கு மிகப் பெரிய சக்தி உண்டு. ஆத்திரத்தில் பேசப்படும் கடும் சொல். அதாவது சுடு சொல் மனத்தில் புண்ணை ஏற்படுத்தி விடும். அந்தப்புண் என்றும் ஆறாது; அந்தப் புண்ணால் ஏற்பட்ட தளும்பு என்றும் மறையாது. உடம்பின் வெளிப்புறத்தில் ஏற்படும் புண் ஆறிவிடும்; வலியும் இல்லாமல் போய்விடும். ஆனால் கடுமையான சொற்கள் மனத்தில் ஏற்படுத்தும் புண் அத்துணை எளிதில் ஆறாது.

அருளரசு : இதற்கு உரிய குறளைக் கூறுங்கள்.

கதிரவன் : திருக்குறளின் 'அடக்கம் உடைமை' என்ற பதின் மூன்றாவது அதிகாரத்தில் வரும் 129 ஆம் வருகிறது இது. கருத்தூன்றிக் கேளுங்கள்.

" தீயினால் சுட்ட புண் உள்ளாறும்; ஆறாதே
நாவினால் சுட்ட வடு."

கயல்விழி : இதன் பொருளை விளக்குங்கள் மாமா.

கதிரவன் : தீயினால் - அதாவது நெருப்பால் ஏற்படும் புண்ணால் உடம்பில் வடு இருந்தாலும் உள்ளே ஆறிவிடும். ஆனால் நாவால் வெளிப்படும் தீயைப் போன்ற சொல்லால் ஏற்படும் தளும்பு மனத்தில் நிலையாகப் பதிந்துவிடும். நினைக்கும் போதெல்லாம் மனத்தில் துன்பத்தை ஏற்படுத்திக் கொண்டே இருக்கும்.

கயல்விழி : உண்மைதான் மாமா. ஒருமுறை நான் சாப்பிட்ட
மங்கைக் கழுவிய பொழுது அது கைதவறிக் கீழே
விழுந்து உடைந்துவிட்டது. உடனே என் அருகில் வந்து
'தறுதலை', 'மங்கை உடைத்து விட்டாயே! உனக்குப்
பொறுப்பே இல்லை. பொருள்களைக் காக்க வேண்டு
மென்ற அக்கறை இல்லை. நீ ஒரு மக்கு; மண்டு. உனக்கு
அறிவே இல்லை. அம்மா வரட்டும். அவரிடம் திட்டு
வாங்கப் போகிறாய். கன்னத்தில் பளார் பளார் என்று
அறையப் போகிறார். என்றார். நான் நடுநடுங்கிப் போனேன்
அதை இப்பொழுது நினைத்தாலும் மனம் பதறுகிறது.

மாமா : அதுதான் சுடுசொல். சொல்லால் சுடும் புண் மேலே
ஆறினாலும் உள்ளே ஆறாது. நீ வேண்டுமென்று மங்கை
உடைக்க வில்லை. கைத்தவறி விட்டது; அவ்வளவுதான்.
அக்காள் அன்பாக அறிவுரை கூறியிருக்கலாம்.

கயல்விழி : 'அம்மா வந்ததும் நடந்ததைக் கூறினேன். அவர்
அக்காவைத்தான் திட்டினார். அக்கா, அதன் பிறகு
என்னைத் திட்டியதே இல்லை.

கதிரவன் : திருவள்ளுவர் இந்த அதிகாரத்தில் நாவடக்கம் பற்றியும்
கூறியுள்ளார்.

அருளரசு : நாவடக்கம் என்றால் என்ன மாமா ?

கதிரவன் : நாம் பேச உதவுவது நம் நாக்கு அல்லவா ? அந்த நாக்கு,
கண்டதை எல்லாம் பேசாமல் பார்த்துக் கொள்ள
வேண்டும். தப்பித் தவறியும் தீய சொற்களைப்
பேசக் கூடாது.

கயல்விழி : இன்னும் கொஞ்சம் விளக்கமாகக் கூறுங்கள் மாமா.

கதிரவன் : நாம் காக்க வேண்டிய பொருள்கள் நிரம்ப உள்ளன
அல்லவா? வீட்டுத் தளவாடப் பொருள்கள். கைப்பேசி,
கடிகாரம், பணம், அணிகலன்கள் என்று பல உள்ளன.
அவற்றை இழந்தாலும் உழைத்துத் திரும்பப் பெற்று
விடலாம். ஆனால் வாய் தவறிப் பேசும் தீய சொற்கள்
பேசியது பேசியதுதான். அவற்றைத் திரும்பப்பெற
முடியா அத்தீய சொற்களால் பல தீமைகளை
ஏற்படுத்தி விடும்.

அருளரசு : இப்பொழுது நன்றாகப் புரிகிறது மாமா.

கதிரவன் : அதனால்தான் திருவள்ளுவர்
"யாகாவார் ஆயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு" (121)
இதன் பொருள் என்னவென்றால், உன்னால் எதைக்
காபாற்ற முடியாமல் போனாலும் பெரிய கேடு இல்லை.
ஆனால் நாவைக் காத்துக் கொள்ளாவிட்டால் நாவிலிருந்து
வெளிப்பட்ட சொற்குற்றத்தில் மாட்டி துன்புற நேரிடும்.

அருளரசு : நான் இனிமேல் கவனமாப் பேசுவேன் மாமா.

கயல்விழி : இன்று நான் தவறிக் கீழே விழுந்தது நல்லதாகப் போய்
விட்டது. இல்லை என்றால் இந்த அருமையான
திருக்குறள் தெரிந்திருக்க முடியுமா?

கதிரவன் : கயல்விழி , நீ தவறிக்கீழே விழுந்ததனால் தான் நான்
திருக்குறள் விளக்கம் தரவில்லை. நீங்கள்
வரும்போதெல்லாம் திருக்குறள் விளக்கம்
தந்து கொண்டு தானே இருக்கிறேன்.

அருளரசு : ஆமாம் மாமா

கயல்விழி : இன்று நடந்ததைப் பற்றித் திருக்குறள் விளக்கம் தந்தது சிறுப்பாக
இருந்தது மாமா.

மதியமுகம் : இதுவரை செவிக்கு இனிய விருந்தை மாமா படைத்தார் ;
வாருங்கள் நாவிற்கு இனிய விருந்தை நான் படைக்கிறேன்.

(எல்லோரும் மகிழ்ச்சியோடு செல்லுதல்)

- முற்றும் -

## காலத்தாழ்வு நன்மையளிக்காது



--திருமதி.தாமரை சீனிவாசராவ்

இந்த இதழின் பொறுப்பாசிரியர்.சிறந்த எழுத்தாளர்.பேச்சாளர்.
கம்போடியாவில் செயற்பட்டுவரும் ஆங்கோர்த் தமிழ்ச் சங்கத்தின் பொருளாளர்.

.

ஒரு செயலில் ஈ.டுபட முடிவெடுக்கும்போது அச்செயலால் விளையும் நன்மைகள்,தீமைகள் பற்றிய ஆராய்ச்சியும் முடிவடைந்திருக்க வேண்டும். முடிவெடுத்த பிறகு காலந்தாழ்த்துவது தீதாக முடியும்.முதலில் ஒரு செயலை நாம் செய்ய முடிவெடுக்கும் போது,அச்செயலை நாம் செய்து முடிக்க முடியுமா,அதற்கான திறம் நம்மிடம் இருக்கிறதா என்பதை அறிந்துக் கொண்டால் அச்செயலை எளிதாகச் செய்ய முடியும்.ஆனால் அவசரப்பட்டு ஒரு செயலை ஆரம்பித்து முடிக்க முடியாமலோ அல்லது காலம் தாழ்த்துவதோ தீமையை விளைவிக்கும். எனவே ஆராய்ந்து, ஒரு செயலில் இறங்குவது நல்லது.

ஒரு பள்ளியில் ஆசிரியர் பிள்ளைகளுக்கு பாடம் எடுத்துக் கொண்டிருந்தார்.தமிழ் வகுப்பு என்றாலே மாணவர்கள் மகிழ்ச்சியாக மாறிவிடுவார்கள்.ஏனெனில் ஆசிரியராக இருக்கும் கிள்ளி வளவன் அவ்வளவு திறமாக,மாணவர்களைக் கவரும் வண்ணம் கதைச் சொல்லி,கருத்துக்கள் சொல்லி வகுப்புகள் எடுப்பார்.

அவ்வாறே,ஒரு நாள், குறள் வகுப்பு எடுக்கும் போது ஆசிரியருக்கும் மாணவர்களுக்குமிடையே வகுப்பில் பின்வருமாறு உரையாடல் நிகழ்ந்தது.

ஆசிரியர்: ஒரு செயலைச் செய்யும் போது திட்டமிடாமல் செய்தால் வெற்றி கிடைக்குமா?

மாணவர்கள்: கிடைக்காது ஐயா...



ஆசிரியர் : சரியாகச் சொன்னீர்கள். ஒரு செயலைத் திட்டமிடாமல் செய்யும் போதோ அல்லது காலம் தாழ்த்தி செய்யும் போதோ தீமை விளைந்துவிடும்.கவனமாகக் கேளுங்கள், இப்போ நீங்களெல்லாம்

சரியான நேரத்தில் பாடத்தைப் படிக்காமல்,நாளை படிக்கலாம்,நாளை படிக்கலாம் என்று தள்ளி போட்டால் என்ன நடக்கும்?

மாணவன்: ஆசிரியரிடம் உதை கிடைக்கும்.(வகுப்பறையில் மற்ற மாணவர்கள் சிரித்தனர்).

ஆசிரியர்: அதுவும் கிடைக்கும்...! ஆனால் அன்றைய பாடத்தை அவ்வப்போது  படிக்காமல், உடனே படித்துத் தேர்வு எழுத முடியுமா ?

மாணவர்; கண்டிப்பா முடியாது ஐயா. கண்டிப்பாக தேர்வு எழுத முடியாது, படித்தால் தானே எழுத முடியும் என்றனர்..

ஆசிரியர்: சரியாகச் சொன்னீர்கள்....சரி இன்னொரு உதாரணம் சொல்கிறேன்.கேளுங்கள்.ஒரு பெரிய மருத்துவர்,நன்கு

கற்றறிந்தவர்,ஆபத்தான நிலைமையில் இருந்த பல நோயாளிகளை அறுவைச் சிகிச்சை மூலம் காப்பாற்றியவர்.அவரிடம் ஒரு நோயாளி தனது உடல்நலக் கோளாறுக்காக சிகிச்சை மேற்கொள்கிறார்.அப்போது அவர் நிலைமையை விளக்கி,உடனடியாகத் தங்களுக்கு அறுவை சிகிச்சை மேற்கொள்ள வேண்டும்,தாமதிக்காமல் செய்ய வேண்டும் என்கிறார்.அப்போது அந் நோயாளி, பொறுமையாகப் பார்த்துக் கொள்ளலாம் என்று கூறினால் என்ன நடக்கும்? நாளை,நாளை என்று தள்ளிப்போட்டுக் கொண்டிருந்தால் என்னவாகும் என்றார்?

மாணவர்: அவர் உயிருக்கே ஆபத்தாகி விடும் ஐயா.மருத்துவர் சொன்ன நேரத்திற்குள் செய்து விட வேண்டுமே!

ஆசிரியர்: உண்மை தான்.காலம் தாழ்த்திச் செய்யப்படும் எச்செயலுமே ஆபத்தில் முடிந்துவிடும்.எனவே காலம் தாழ்த்தியோ,நேரத்தைக் கடத்தியோ எச்செயலையும் செய்யலாகாது.நம்முடைய மருத்துவ உலகில், பல்வேறு விதமான முன்னேற்றங்கள் ஏற்பட்டுள்ள நிலையில்,தற்போது மூளைச் சாவு அடைந்தவருடைய முக்கிய உறுப்புகள்,பிறருக்குத் தானம்

கொடுக்கப்பட்டு வருவதைக் கண்கூடாகப் பார்க்கிறோம்.இதில் எடுக்கப்படும் துணிவான முடிவுகள் மருத்துவரை மட்டும் சார்ந்திருப்பதில்லை.இதற்காக, ஆம்புலன்சு ஓட்டுநர் தொடங்கி காவல் துறை அதிகாரிகளின் ஒத்துழைப்பு,போக்குவரத்துக் காவல் துறையின் ஒத்துழைப்பு, என அனைவரின் செயல் திறனால் பலர் பலனடைந்து வருகிறார்கள்.தொலை தூரத்தில் இருந்தாலும்,போக்குவரத்து நெரிசலிலும்,பாதுகாப்பாக,நேரத்தோடு வருவது என்பது ஒப்பற்ற உன்னதச் செயலாகப் பார்க்கப்படுகிறது.இம் முயற்சியில் ஒருவரேனும் தன் பணியில் பின் தங்கினாலும்,அச் செயல் வெற்றியடையாது.மேலும் தானம் கொடுத்த குடும்பத்தினரின் உயரிய நோக்கமும் வெற்றி பெறாது.அவ்வளவு துன்பத்திற்கிடையேயும், அவர்களுடைய உயரிய எண்ணம்,பிறரை வாழ வைக்க வேண்டுமென்ற நோக்கம் ஆகியவை எதற்கும் ஒப்பிட முடியாத அளவிடற்கரியது.அப்படித்தானே மாணவர்களே?

மாணவர் : ஆமாங்க ஐயா.கண் தானம் பற்றி அறிந்திருக்கிறோம் ஐயா.ஆனால் மற்ற உறுப்புகளும் பயன்படும் என்று இதன் மூலம் அறிந்துக் கொண்டோம் ஐயா.

ஆசிரியர்: மற்றொரு உதாரணத்தைப் பார்ப்போம்.மாணவர்களே நாமெல்லாம் நிம்மதியாகவும்,அவரவர் வேலைகளைச் செய்து இயங்க காரணமானவர்கள் யாரென்று தெரியுமா? கூறுங்கள் பார்ப்போம்.

மாணவர்: நம்முடைய பெற்றோர்.

ஆசிரியர் : அது சரிதான், ஆனால் நாம் சுதந்திரமாக,அச்சமில்லாமல் நம் கடமைகளை செய்து வருவதற்கு யார் காரணம்?

மாணவர்: நம்முடைய இராணுவ வீரர்கள் ஐயா.

ஆசிரியர்: நன்று.சரியாகக் கூறினாய்..நாம் எந்தவித அச்சம் கொள்ளாமல்,அந்நிய நாட்டுப் படைகள் நம்மைத் தாக்காத வண்ணம் நம்மைக் காப்பவர்கள் நம் இந்திய நாட்டின் படைத் தளபதிகள்.தன் உயிர் பற்றிக் கவலைப்படாத துணிவுக் கொண்டவர்கள்.நாட்டின் நலனில் அக்கரைக் கொண்டு,தன் குடும்பத்தையும் மறந்து,நாட்டு மக்களுக்காக உழைக்க வரும் உத்தமர்கள்.

இப்போது சொல்லுங்கள், ஒரு பெரிய தாக்குதல் நடக்கும் போது,வேகமாக முன்னேறி எதிரிப் படைகள் வந்து சண்டையிட்டுக் கொண்டிருக்கும் போது, சற்று பின் வாங்கினால் கூட எவ்வளவு தீமை நடந்து விடும்?ஆனால் துணிவுடன் எடுத்த செயலை நிறைவேற்ற முடிவெடுக்கும் அவர்கள் திறத்தால் நாம் எவ்வாறு காப்பாற்றப் படுகிறோம் என்பது நாம் அறிய வேண்டிய ஒன்று.

இப்போது புரிந்து கொண்டீர்களா? இதைத் தான் வள்ளுவர் ஒரு செயலைச் செய்யத் துணிவு பெறுவதே,அவ்வினையை நாம் ஆக்கப்பூர்வமாக ஏற்றுக் கொண்டதற்கு அடையாளமாகும்.ஆனால் அவ்வாறு பெற்றத் துணிவைச் செயலாக்க காலம் தாழ்த்தினால் தீமையே விளையும் என்று கூறுகிறார்.

சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு

தாழ்ச்சியுள் தங்குதல் தீது.-- குறள் : 671-வினைசெயல்வகை

## அறிவு அழிவிலிருந்து காக்கும்



செல்வன் செ.குருபரன்

பன்னிரண்டாம் வகுப்பு- 'பி' பிரிவு

பால வித்தியா மந்திர் பள்ளி-அடையாறு

> பள்ளி மாணவர்கள் படைப்புகள் மகிழ்வுடன் வரவேற்கப்படுகின்றன.
> குறள் விளக்க்க் கதைகள்,நாடகங்கள்,கட்டுரைகள்,கவிதைகள் ஆகியவற்றை
> anjal@kuralvirtual.com எனும் மின்ன்ஞ்சல் முகவரிக்கு அனுப்புங்கள்

ஒரு நாள் காலையில் ஒரு மரத்தின் மீது சேவல் உட்கார்ந்து இருந்தது. காலை நேரம் அழகாக இருந்தபடியால் உற்சாகமாய் சேவல் கூவியது. பலதடவை கூவியது.

இதைக் கேட்ட நரி அங்கே வந்தது. நரிக்குச் சரியான பசி இருந்தது. அந்தச் சேவலைப் பிடித்துச் சாப்பிட ஆசைப்பட்டது, ஆனால் சேவல் மரத்தின் மீது இருந்தபடியால் அதைப் பிடிக்க முடியவில்லை. இதற்காக ஒரு தந்திரம் செய்ய நினைத்தது. உடனே சேவலைப்பார்த்து,

"சகோதரனே!, வணக்கம். ஒரு நல்ல செய்தியை நீ கேள்விபட்டாயா? பறவைகளுக்கும், மிருகங்களுக்கும் ஒரு சமாதான ஒப்பந்தம் ஏற்பட்டு விட்டது. இனி ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொள்ளக் கூடாது.

அன்பாய் நடந்து கொள்ள வேண்டும், சகோதர மனப்பான்மையை வளர்க்க வேண்டும். நீ கொஞ்சம் கீழே வாயேன். இந்த நல்ல செய்தியைப் பற்றி பேசுவோம்” என்றது

.நரியின் தந்திரப் பேச்சைச் சேவல் புரிந்து கொண்டது. அதை வெளியே காட்டவில்லை. தூரத்தில் எதையோ பார்ப்பதைப் போல் தலையைத் தூக்கிப் பார்த்தது.

இதைக் கண்ட நரி, “என்ன சகோதரா!, ரொம்ப அக்கறையாக எதையோ அடிக்கடி பார்க்கிறாயே. அங்கே என்ன இருக்கிறது?” என்று கேட்டது.

அதற்குச் சேவல்,“அங்கே சில வேட்டை நாய்கள் வருவது மாதிரி தெரிகிறது. வேட்டை நாய்கள் தானா என்பதைக் கவனிக்கிறேன்.”என்றது.

அவ்வளவு தான்! நரிக்கு உடல் நடுங்கி விட்டது, வேகவேகமாக “சரி, சரி நான் அப்புறமாக வந்து உன்னிடம் பேசுகிறேன்” என்று கூறிக் கிளம்பியது.

சேவல், “அருமை சகோதரா, போகாதே, நான் இதோ கீழே வருகிறேன். நாய்களைக் கண்டு ஏன் பயப்படுகிறாய்? இப்பொழுது தானே நீ சொன்னாய், எல்லோருக்கும் இடையே சமாதான ஒப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது”என்றது.

“அந்த ஒப்பந்தைத்தைப் பற்றி அநேக பேர் கேள்விப்பட்டிருக்க மாட்டார்கள், அந்த நாய்களுக்கு தெரியாமல் இருந்தால், நான் என்ன கதி ஆவது? நான் போகிறேன்”.

இதைச் சொல்லி விட்டு நரி ஒரே ஓட்டமாக ஓடி காட்டுக்குள் மறைந்தது.

சேவல் “யாரிடம் ஏமாற்றப் பார்க்கிறாய், உன்னுடைய கெட்டிக்காரப் பொய்கள் என்னிடம் பலிக்காது” என்று கூறி சிரித்தது.

கெட்டிக்காரன் புளுகினாலும் அது புத்திசாலியிடம் வெளிபட்டு விடும்.

குறள் 421: அறிவு அற்றங் காக்குங் கருவி செறுவார்க்கும் உள்ளழிக்க லாகா அரண்

விளக்க உரை: அறிவு அழிவு வராமல் காக்கும் கருவியாகும், அன்றியும் பகைகொண்டு எதிர்ப்பவர்க்கும் அழிக்க முடியாத உள்ளரணும் ஆகும்.

கற்க கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.

# குறள் விருந்து



தி.பி.2053 ஆவணி-8 திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ் பொ.ஆ.2022 ஆகத்து-24

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்









**குறளைக் கற்போம் குழந்தைகளே**

**குன்றெனப் புகழைக் குவிப்போமே**

**பிஞ்சு வயதினில் கற்றிடும் குறளால்**

**நெஞ்சில் நன்னெறி விதைப்போமே**

**சிறுவர்கள் பயிலும் குறள்நெறியால்**

**பெருமைகள் பலவும் சேர்ப்போமே**

**வள்ளுவர் தந்த வான்மறையால்**

**வாழ்வில் சிறப்புடன் உயர்வோமே**

**நாடும் வீடும் நலம் பெறவே**

**நாளும் குறளைக் கற்போமே**

**கசடறக் கற்றுத் தெளிவோமே**

**கற்றபின் அதன்வழி நிற்போமே**

**வல்லமை பெற்று உழைப்போமே**

**வல்லரசாக நாட்டை அமைப்போமே**

சிறப்பாசிரியர்: மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன்

பொறுப்பாசிரியர்: திருமதி தாமரை சீனிவாசராவ்

ஆசிரியர்:மறைமலை இலக்குவனார்

# ஒப்புரவாளரை உலகம் போற்றும்



--திருமதி.தாமரை சீனிவாசராவ்

இந்த இதழின் பொறுப்பாசிரியர்.சிறந்த எழுத்தாளர்.பேச்சாளர்.
கம்போடியாவில் செயற்பட்டுவரும் ஆங்கோர்த் தமிழ்ச்
சங்கத்தின் பொருளாளர்.

.

கந்தனும்,பாபுவும் நண்பர்கள்.தன்னுடன் எப்போதும் பிரியாமல் இருக்கும் பாபுவை அவனுக்கு அதிகம் பிடிக்கும்.எளிமையாக வாழும் அக் குடும்பத்தை எப்போதும் கந்தன் வியப்பாகவே பார்ப்பான்.ஏனென்றால் கந்தனின் உற்ற நண்பனாக இருந்த பாபுவின் குடும்பம் பொருளாதார வசதியில்லாமல் வறுமையான நிலையில் வாழ்ந்து வந்தனர்.ஆனாலும் மகிழ்ச்சியாக இருப்பதைக் கண்டு, இருப்பதைக் கொண்டு மகிழ்வாக இப்படியும் நிறைவாக வாழ்கிறார்களே என்று அக்கம்பக்கத்தினர் பேசுவதும் உண்டு.வயது முதிர்ந்த தன் பாட்டி பாபுவிற்கு,ஒரு மிகப்பெரிய ஊக்கச் சத்து பேரனுக்கு தேவையானவற்றை செய்வது முதல் நல்ல நல்ல கதைகளைக் கூறிக் கொண்டே இருப்பார்.பாட்டியின் துணை பாபுவிற்கு அனைத்துமாக இருந்தது.தனது படிப்பு நேரம் போக பாட்டி செய்யும் பனைத் தொழில் பொருட்கள் தயாரிப்பிலும் உதவி செய்வான்.அவ்வாறு செய்யும் போது பாட்டி அவனுக்கு சில்லரைகள் தருவதுமுண்டு. தம்பி,வீண் செலவு செய்யாதே என்று சேமிக்கவும் கற்றுத் தந்தார்.நற்பண்புகள்,உதவும் குணம்,சேமித்து வைக்கும் திறம் போன்ற உயரிய நல்ல பண்புகளும்,குணங்களும்,அவனை பள்ளியிலும் சரி , வீட்டிலும் சரி அனைவராலும் பாராட்டும் படியாகவும் நடந்துக் கொள்ள வைத்தது..ஆசிரியருக்கு பிடித்த மாணவனாக,சுட்டியாக சொல்லும்

வேலைகளைச் செய்பவனாகத் திகழ்ந்தான். அவ்வாறு ஒரு நாள் பாட்டி அவனுக்கு சில கதைகளைச் சொன்னார்கள்.கந்தனும் அவனுடன் ஆர்வமாக கதைகளைக் கேட்க ஆரம்பித்தான்.

அயல் நாட்டிலிருந்து வந்து, தான் கண்ட மக்களின்,ஏழ்மை நிலையினையும் வறுமையையும் கண்டு மனம் கலங்கி நின்றார் அன்னை தெரசா.அப்போது சிறிதளவு உதவத் தொடங்கிய அவர் தன்னிடம் பெருஞ் செல்வத்தை வைத்து உதவி புரியவில்லை.கல்கத்தாவில் தான் வாழ்ந்த பகுதியில் உள்ள செல்வந்தர்களிடம் கையேந்தி உதவிகளைப் பெற்றார். அவமானங்கள்,ஏளனங்கள்,என அனைத்தையும் கடந்து,பிறருக்கு உதவி செய்வதையே பெரும் குறிக்கோளாகக் கொண்டு செயல்படுத்தினார்.அவரின் உயரிய செயல் பல்வேறு உயிர்களைக் காத்தது மட்டுமல்லாமல் பெரிய தொண்டு நிறுவனமாக வளர்ந்து இன்றும் செயல்பட்டுக் கொண்டு வருகிறது.மேலும் உலகின் பல்வேறு விருதுகளையும்,பெற்று மிகப் பெரிய இடத்திற்கு உரியவரானார்.
தான் வறுமையில் வாடிய போதும் தன்னைத் தேடி வந்த எளியோருக்கு தன்னிடம் இருந்ததை கொடுத்து அவர்கள் மகிழ்வதும் கண்டு இன்புற்று மகிழ்ந்தார். தன் பிள்ளைகளுக்கு என்று இரவல் வாங்கி வைத்திருந்த அரிசியைக் கூட குருவிகளுக்கு போட்டு பசியைத் தீர்த்தவர் பாரதியார்.தனியொருவனுக்கு உணவில்லையென்றால் சகத்தினையே அழிக்க வேண்டும் என்று குரல் கொடுத்தார்.எளியோருக்கு உதவும் குணம் வேண்டும் என்று தன்னிடம் பழகியவர்களிடம் கூறிக் கொண்டே இருப்பார்.
கலைவாணர் என்.எசு.கிருட்டிணன் அவர்கள்,சிறு வயதில் தான் அடைந்த துன்பத்தைப் பிறர் அடையக் கூடாது என்று தான் திரைத்துறையில் பெற்ற வருமானத்தைப் பெரும்பாலும் உதவி செய்வதையே நோக்கமாகக் கொண்டிருந்தார்.செல்வம் தேய்ந்த காலத்தில் கூட தன்னிடம் இருந்ததை தன்னுடைய இறுதிக் காலம் வரை தானம் செய்துக் கொண்டே இருந்தார்.

உன் தாத்தாவும் அப்படித்தான் கண்ணு.வேலை விட்டு வரும் போதே,வாங்குற கூலியக் கூட,யாராவது உதவிக்கு கேட்டா,பசின்னு கேட்டா கொடுத்திடுவாறு.என் இராசா நீயும் அவர் போல நல்லப் பேர வாங்கணும் என்று பாட்டி,பாபுவிற்கு அறிவுரைகள் கூறினார்.ஒரு நாள் பள்ளியில் வகுப்புகள் நடந்துக் கொண்டிருந்தது.அப்போது ஆசிரியர் ஏன் மலர் பல நாட்களாக பள்ளிக்கு வரவில்லை? யாருக்காவது தெரியுமா என கேட்டுக் கொண்டிருந்தார்.சிலர் அவள் அப்பாவுக்கு உடல் நிலை சரியில்லை ஐயா.அதனால் அவள் அம்மா மிகவும் சிரமப்பட்டு கொண்டு அறுவைச் சிகிச்சைக்காக பணம் தேவைப்படுவதால், பல இடங்களில் அலைந்தும் கொண்டிருக்கிறார். அதனால் வீட்டில் அவள் தந்தையையும்,தம்பியையும் பார்த்துக் கொள்ள வேண்டும்.அதனால் அவளுக்கு வகுப்பிற்கு வர முடியவில்லை என்றனர்.

ஆசிரியர் சூழ்நிலையைப் புரிந்துக் கொண்டு,சரி மாலையில் யாராவது என்னோடு வாருங்கள்.மலர் வீட்டிற்குச் சென்று வருவோம் என்றார்.அப்படியே மாலை நேரம் மலர் வீட்டிற்குச் சென்று அவளின் தந்தையின் உடல் உபாதைகள் பற்றிக் கேட்டறிந்தனர்.நிலைமையை அவர்கள் கூற ஆசிரியர் ஒரு முடிவு செய்தார்.மறுநாள் பள்ளியில் தலைமை ஆசிரியரிடம் இதைப் பற்றி பேசி அவரவர்களால் இயன்ற தொகையை வழங்குமாறு பள்ளி மாணவர்களிடம் தெரிவித்தனர்.

மறுநாள் மாணவர்கள் அனைவரும் தங்களால் இயன்றதை அவ்வகுப்பு ஆசிரியர்களிடம் உதவித் தொகைகளாக அளித்தனர்.அப்படி அனைத்து தொகைகளும் சேர்க்கும் போது,தனது உடன் பயிலும் மாணவிக்கு உதவ,மற்ற மாணவர்களை விட பாபு சற்று கூடுதலாக உதவியளித்தான்.அப்போது மற்ற ஆசிரியர்களுக்கு ஆச்சரியம் கூட,இவ்வளவு வறுமை நிலையில் கூட எப்படி பாபு உனக்கு இந்த எண்ணம் தோன்றியது? என்று கேட்டனர். அதற்கு பாபு,இல்லை ஐயா இது என் பாட்டிக்கு உதவியாக வேலை செய்யும் போது அவர் கொடுத்த பணம் தான்.பிறந்தநாளுக்கு பெற்றோர் தருவதையும் சேர்த்து வைத்தேன்

ஐயா.பிறகு எனது பாட்டியிடமும் மலரின் அப்பாவைப் பற்றி கூறினேன்.அவர்களும் உதவி செய்தார்கள்,அந்த பணம் தான் ஐயா என்றான்.அவனது உயரிய குணத்தை எண்ணி ஆசிரியர்கள் மிகுந்த பெருமையுடையது மற்ற மாணவர் முன் பாபுவிற்கு கைத்தட்டலையும் பெற்றுத் தந்தனர்.

பாபுவின் உயரிய பண்பை பாராட்டாமல் இருக்க முடியுமா?கந்தன் தன் தோழனை கட்டித் தழுவிக் கொண்டான்.நாங்களெல்லாம் பெற்றோரிடம் வாங்கி வந்தோம்,ஆனால் நீ, சேமித்து வைத்ததை கொடுத்தாயே என்று பாராட்டினான்.அந்த உதவித் தொகையும் மலர் அப்பாவின்,அறுவை சிகிச்சைக்கு பேருதவியாக இருந்தது.

தன்னால் இயன்றதைப் பிறருக்குச் செய்வதை விட,தன்னலம் பாராமல் தன்னை வருத்தி பிறருக்கு செய்யும் உதவி,ஆகப் பெரிய, பெருஞ்செயலாகப் பார்க்கப்படும்

உதவி செய்யும் எண்ணத்தை உடையவர்கள் தங்களிடம்,அந்த உதவி செய்யக்கூடிய அளவிற்கு செல்வம் இல்லையென்றாலும்,பிறருக்கு உதவி செய்வதிலிருந்து பின்வாங்க மாட்டார்கள்.பிறரிடம் கடன் பெற்றுக் கூட துன்பப்படுவோருக்கு அளிக்கும் உயரிய குணத்தை தன்னில் வைத்திருப்பார்கள்.தன்னிடம் போதிய செல்வம் இல்லாத போதும் பிறருக்கு உதவுவதை பெரும் நோக்கமாகக் கருதி உதவுபவர் இம்மண்ணில் ஏராளமுண்டு.அன்னை தெரசா,,மகாகவி பாரதியார், கலைவாணர்என்.எசு..கிருட்டிணன் போன்ற ஏராளமான மாமனிதர்கள் இக்குறளுக்கு உதாரணமாக வாழ்ந்தவர்கள் தான்.

சங்க காலம் தொடங்கி நமது தமிழ் மரபில் பல்வேறு வரலாற்றுத் தரவுகளை பார்க்கலாம்.வறியவருக்கு ஈதல், உதவி புரிதல் ஆகியன தொன்றுத் தொட்டு வரும் மரபே.நமது கடையேழு வள்ளல்களான பேகன்,பாரி,ஆய்,காரி,அதியமான்,நள்ளி,ஓரி ஆகியோரை ஆதாரமாகக் காணலாம்.அவர்கள் மட்டுமல்லாமல்,முதலேழு வள்ளல்கள்,இடையேழு

வள்ளல்கள் என பலரை நாம் ஆதாரமாகக் காணலாம்.அவ்வகையில் தன்னிடம் தேவையான பொருளாதார நிலை இல்லாத சூழலிலும்,பிறருக்கு உதவும் ஒப்பற்ற மனிதர்களைக் காண்கிறோம்.அவ்வாறானாவர்கள் ஒப்பற்ற பெயரையும்,இடத்தையும் பெற்றுள்ளார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இடனில்  பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்
கடனறி காட்சி யவர்.[ஒப்புரவறிதல்-குறள் எண்:218]

## ஔவை - அதியமான் மாசற்ற நட்பு



சு. கலைவாணன்

அறிவியல் ஆய்வாளர்,
இந்திய அணுசக்தி துறை,
கனநீர் திட்டம்,
தூத்துக்குடி.

தமிழ்நாட்டின் வடமேற்காக தற்போதைய தருமபுரிக்கு அருகே அமைந்திருந்த தகடூர் என்ற பகுதியை கடையேழு வள்ளல்களில் ஒருவனான அதியமான் அஞ்சி என்ற குறுநில மன்னன் ஆண்டு வந்தான். அதியமான் தகடூரை ஆண்ட அந்தக்காலத்திலேயே தமிழ்நாட்டின் வடகிழக்கில் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு தொண்டைமான் இளந்திரையன் என்னும் மன்னன் ஆட்சி செய்து வந்தான்.

அதியமானுடன் போரிட்டு அவன் மண்ணை கைப்பற்ற வேண்டும் என்ற நீண்ட நாள் ஆசையால் தகடூரை தாக்க திட்டமிட்டு போருக்கு ஏற்பாடு செய்தான் இளந்திரையன்.

இந்தச் செய்தியை ஒற்றர்கள் மூலம் அறிந்து கொண்டான் அதியமான். அதியமான் பெரிய போர்வீரனே ஆனாலும் அப்பொழுது போரை தவிர்க்கவே விரும்பினான்.

அதியமான் அரசவையைக் கூட்டி அவையின் கருத்துகளை கேட்டறிந்தான். அவையின் கருத்து தொண்டைமானுக்குத் தூது அனுப்புவது என முடிவாயிற்று. அவையிலிருந்த ஔவை எழுந்து நான்

இளந்திரையனிடம் தூது சென்று அமைதிக்கு வழி வகுப்பேன் என்று கூறி காஞ்சிக்குச் சென்றார்.

இளந்திரையன் அவையிலும் ஔவைக்குப் பெருஞ்செல்வாக்கு இருந்தது.

ஔவையை வரவேற்றுச் சிறப்புச் செய்த இளந்திரையன் தன் படைபலத்தை ஔவையின் மூலமாக அதியமானுக்கு காட்ட விரும்பினான். எனவே தன்னுடைய ஆயுத கிடங்கிற்கு ஔவையை அழைத்துச்சென்று அங்கே வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டிருந்த போர் ஆயுதங்களை ஒவ்வொன்றாகக் காண்பித்தான். அந்த ஆயுதங்கள் புதிதாகவும் நெய் தடவி மினுமினுப்பாகவும் காணப்பட்டன. அக்கூட்டத்தில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த ஆயுதங்கள் மயில் இறகினாலும் பூமாலைகளாலும் அழகுபடுத்தப் பட்டிருந்தன. இவ்வாயுதங்களைப் பெருமிதத்தோடு ஔவைக்குக் காட்டினான் இளந்திரையன்.

திரையனின் செருக்கு ஔவைக்குப் புரிந்தது. அதை அடக்க நினைத்த ஔவை இங்கே உன் ஆயுதங்கள் எல்லாம் மயில் இறகாலும் பூக்களாலும் அழகு படுத்தப்பட்டு ஒழுங்காக அடுக்கி வைக்கப்பட்டுள்ளன.

ஆனால் அதியமானுடைய ஆயுதங்கள் குருதியில் நனைந்து பகைவர்களின் இரத்தம் தோய்ந்த சதைகளுடன் நிறம் மாறிக்கிடக்கின்றன. அவை முனை மழுங்கிக் கொல்லனின் பட்டறையில் சரிசெய்வதற்காகக் குவிக்கப்பட்டிருக்கின்றன என்று பல களம் கண்ட அதியனின் வீரத்தைச் சுருக்கமாக திரையனுக்கு எடுத்துரைத்தார்.

தன்னைப் புகழ்வது போல் இகழ்ந்தும் அதியனை இகழ்வதுபோல் புகழ்ந்தும் ஔவை உணர்த்திய குறிப்பைத் திரையன் புரிந்து கொண்டான். ஔவைக்கும் அவர் கருத்துக்கும் மதிப்பளித்தான். அதியமானோடு போரைத் தவிர்த்து நட்புக் கொண்டான்.ஔவைக்கும் பெருமைமிகுச் சிறப்புகள் பல செய்து தகடூருக்கு அனுப்பி வைத்தான். அதியமானுடன் ஔவைக் கொண்டிருந்த மிக ஆழமான மாசற்ற நட்பு அம் மன்னனையும் மண்ணையும் மக்களையும் காத்தது . அதியமானுக்கு ஔவையின் நட்பு கிடைத்தது போல் நம் ஒவ்வொருவருக்கும் மாசற்ற நண்பர்கள் அமைந்தால் நாம் அகிலத்தில் எதையும் சாதிக்கலாம். வள்ளுவத்தின் கூற்றும் இதுதான்.

மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க

துன்பத்துள் துப்பாயார் நட்பு. அதிகாரம் :-- செய்ந்நன்றி அறிதல்.

குறள் எண் :-- 106.

மாசற்றார் :-- குற்றமற்றார்.

கேண்மை:-- நட்பு.

துறவற்க:-- விட்டு விடாதிருக்க.

விளக்கம் :--

குற்றமற்ற சிறந்த பண்புடையவர்களின் உறவையும் நட்பையும் எப்பொழுதும் மறக்கலாகாது. மற்றும் துன்பம் வந்தக் காலத்தில் உறுதுணையாய் நின்று உதவியவர்களின் நட்பை எப்போதும் கை விடுதல் கூடாது.

மாசற்றார் கேண்மை:--

நூல் அறிவைப் போதிக்கும்  ஆன்றோர்களையும், அறிவு நலன்களைப் போதித்து ஆருயிர்க்கு உதவி புரிகின்ற பெரியோர்களையும், மற்றும் அல்லல்களை நீக்கி வாழ்வில் நல்லது செய்யும் சான்றோர்களையும் நமது வாழ்வில் மறக்கக்கூடாது. அவர்களின் நட்பைக் கைவிடக்கூடாது. இது போன்றவர்களின் நட்பைத்  தான் மாசற்றவர்களின் கேண்மை  என்று வள்ளுவர் குறிப்பிடுகிறார். இந்தக் குறளின் மூலம் இரண்டு கருத்துக்களை வள்ளுவர் வலியுறுத்துகிறார். முதல்பாதியில் மாசற்றார் கேண்மையைக் கைவிடக்கூடாது என்று குறிப்பிடுகிறார். இரண்டாவது பாதியில் "துன்பத்துள் துப்பாயார் நட்பை "அதாவது நாம் துன்பப்பட்ட பொழுது நமக்கு  உதவியவர்களின் நட்பை மறக்கக்கூடாது என்று குறிப்பிடுகிறார்.

நம்பிக்கை ஊற்று நம் திருக்குறள்



செல்வன் செ.குருபரன்

பன்னிரண்டாம் வகுப்பு- ‘பி‘ பிரிவு

பால வித்தியா மந்திர் பள்ளி-அடையாறு

பள்ளி மாணவர்கள் படைப்புகள் மகிழ்வுடன் வரவேற்கப்படுகின்றன.
குறள் விளக்க்க் கதைகள்,நாடகங்கள்,கட்டுரைகள்,கவிதைகள் ஆகியவற்றை
anjal@kuralvirtual.com எனும் மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்புங்கள்

திருக்குறள் தமிழினத்தின் பெருமைமிகு சொத்து;மனித இனம் முழுமைக்கும் உரிய மாபெரும் அறிவுக்கருவூலம்.மாணவர்கள் வாழ்வில் நம்பிக்கையுடன் செயல்பட வழிகாட்டுவது திருக்குறளேயாகும். மாணவர்களாகிய நம் வெற்றிக்கு வழிகாட்டுவது குறளேயாகும்.ஊக்கமுடைமை என்னும் ஓர் அதிகாரமே போதும்தேர்வுக்கும் வாழ்வுக்கும் ஆயத்தமாக விரும்பும் ஒவ்வொருவரும் இந்த அதிகாரத்தை நாள்தோறும் படித்தாலே போதும்.உடையர் எனப்படுவ தூக்கமஃ தில்லார் உடைய துடையரோ மற்று.[குறள் 591]

ஊக்கம் உடையவரே உடையவர் எனப்படுவர் ஊக்கமில்லாதவர் வேறு எதை உடையவராக இருந்தாலும் அவர் உடையவர் ஆக மாட்டார் என்பது வள்ளுவரின் கருத்து.ஊக்கத்தோடு படிப்போம்.முதன்மை பெறவேண்டும் சிறப்பிடம் பெறவேண்டும் என்னும் எண்ணமே நம்மை உயர்ந்த தகுதிக்கு அழைத்துச்செல்லும்.

கற்க கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.

# குறள் விருந்து



தி.பி.2053 புரட்டாசி-8 *திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ்* பொ.ஆ.2022-செபுத்தம்பர் -24

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்









**குறளைக் கற்போம் குழந்தைகளே**

**குன்றெனப் புகழைக் குவிப்போமே**

**பிஞ்சு வயதினில் கற்றிடும் குறளால்**

**நெஞ்சில் நன்னெறி விதைப்போமே**

**சிறுவர்கள் பயிலும் குறள்நெறியால்**

**பெருமைகள் பலவும் சேர்ப்போமே**

**வள்ளுவர் தந்த வான்மறையால்**

**வாழ்வில் சிறப்புடன் உயர்வோமே**

**நாடும் வீடும் நலம் பெறவே**

**நாளும் குறளைக் கற்போமே**

**கசடறக் கற்றுத் தெளிவோமே**

**கற்றபின் அதன்வழி நிற்போமே**

**வல்லமை பெற்று உழைப்போமே**

**வல்லரசாக நாட்டை அமைப்போமே**

சிறப்பாசிரியர்: மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன்

பொறுப்பாசிரியர்: திருமதி தாமரை சீனிவாசராவ்

ஆசிரியர்:மறைமலை இலக்குவனார்

## திருக்குறளைத் தினம் படிப்போமே



--திருமதி.தாமரை சீனிவாசராவ்

இந்த இதழின் பொறுப்பாசிரியர்.சிறந்த எழுத்தாளர்.பேச்சாளர். கம்போடியாவில் செயற்பட்டுவரும் ஆங்கோர்த் தமிழ்ச் சங்கத்தின் பொருளாளர்.

.

திருக்குறளைத் தினம் படிப்போமே

பொறுப்புடன் அதன்வழி நடப்போமே

வள்ளுவர் வழங்கிய வான்மறையாம்

வாழ்வில் அதுவே  நம் நெறியாம்

தொல்லைகள் இன்றி நாம் வாழ

நல்லவழியைக் காட்டுவதாம்

அல்லல் அனைத்தும் ஓட்டுவதாம்

பிறப்பால் நாட்டால் மொழியால் இனத்தால்

வேற்றுமை கூறுதல் வேண்டாம் என்றே

அனைவர்க்கும் சமநெறி நாட்டுவதாம்

அன்பும் பண்பும் என்றும் போற்றி

அமைதியை நிலைநாட்டுவதாம்!

## அடித்து விளையாடலாமா?



செல்வன் செ.குருபரன்

பன்னிரண்டாம் வகுப்பு- 'பி' பிரிவு

பால வித்தியா மந்திர் பள்ளி-அடையாறு

பள்ளி மாணவர்கள் படைப்புகள் மகிழ்வுடன் வரவேற்கப்படுகின்றன.
குறள் விளக்கக் கதைகள்,நாடகங்கள்,கட்டுரைகள்,கவிதைகள் ஆகியவற்றை
anjal@kuralvirtual.com எனும் மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்புங்கள்

நம் பள்ளிகளில் காணப்படும் ஒரு பழக்கம் உடனடியாகத் திருத்தப்படவேண்டியுள்ளது.ஓய்வு நேரங்களில் அல்லது இடைவேளைகளில் மாணவர்கள் குழுமியிருக்கும் வேளையில் ஒருவரை அடித்துவிட்டு அடித்தவர் ஓடிவிடுவது அல்லது ஒளிந்துகொள்வதைக் கண்டிருப்பீர்கள்.அடிவாங்கியவர் அடித்தவர் இருக்குமிடத்தைத் தேடி மீண்டும் அவரை அடித்துத் தாம் வெற்றியடைந்ததாகப் பெருமிதம் கொள்வார்.இது இத்துடன் நிற்பதில்லை.அடிக்கு மற்றொரு அடி மீண்டும் அடிக்கு அடி எனத் தொடரும்.விளையாட்டாகத் தொடங்கும் இப் பழக்கம் பல வேளைகளில் வினையாக முடிவதும் உண்டு.அடித்தவர் ஒரு வகுப்பு அடி வாங்கியவர் மற்றொரு வகுப்பு எனில் அந்த வகுப்பினருக்கும் இந்த வகுப்பினர்க்கும் நிகழும் சண்டையாகக் கூடப் பகை முற்றிவிடுகிறது.

**கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா**

**செய்யாமை மாசற்றார் கோள்.**- குறள் 312

(ஒருவன் கறுவுகொண்டு துன்பம் செய்த போதிலும் அவனுக்கு திரும்ப

துன்பம் செய்யாதிருத்தலே மாசற்றவரின் கொள்கையாகும்.)

என்னும் வள்ளுவர் வாக்கே நமக்கு வழிகாட்டும் ஒளிவிளக்கு.

அடிப்பதும் திருப்பி அடிப்பதும் ஒரு விளையாட்டாகுமா?ஒரே ஒரு அடி

பல வன்முறைகளுக்கு அடிப்படையாகிவிடுவதும் உண்டு.

கல்லூரியில் படிக்கும் நம் அண்ணன்மார்கள் அரிவாளைக் கையில்

ஏந்திக்கொண்டு பேருந்து நிலையங்களில் ஓடுவதைத்

தொலைக்காட்சியில் பார்க்கிறோமே.இந்தக் காட்சி அவர்களைப்

பெற்றவர்கள் மனத்தை என்ன பாடுபடுத்துமோ?

**இன்னா எனத்தா னுணர்ந்தவை துன்னாமை**

**வேண்டும் பிறன்கட் செயல்** ( ஒருவன் துன்பமானவை என்று தன்

வாழ்க்கையில் கண்டு உணர்ந்தவைகளை மற்றவனிடத்தில் செய்யாமல்

தவிர்க்க வேண்டும்.)- குறள் 316

வள்ளுவர் வாய்மொழியை என்றும் போற்றுவோம்.

வன்முறை தவிர்ப்போம்.

அன்புநெறியே நம் வாழ்க்கைநெறி.

சிறுவர் இலக்கியம்

குறள் நெறி நாடகம்



# அடக்கம்

**இந்த நாடகத்தை இயற்றி வழங்கியவர் “மலேசியாவின் அழ.வள்ளியப்பா“ என்று பாராட்டப்படும் மலேசியப் பாவலர் முனைவர் முரசு நெடுமாறன் ஆவார்.மலேசியத் தொலைக்காட்சியிலும் வானொலியிலும் ஆயிரக்கணக்காகக் குழந்தைப் பாடல்களும் நாடகங்களும் படைத்து வழங்கிய வரலாற்றுச்சாதனையாளர் இவரே.“மலேசியக் கவிதைக்களஞ்சியம்” என்னும் இவரது தொகுப்பு நூல் மலேசியாவில் இருநூறாண்டுகளாக வளர்ந்துவரும் தமிழ்க்கவிதையின் வரலாற்றைக் கூறுவது.தமது கவிதைப் பணிக்காகத் தமிழக அரசால் பாரதிதாசன் விருது வழங்கிச் சிறப்பிக்கப்பட்ட முதல் அயல்நாட்டவர்.**

காட்சி : 1

இடம் : பள்ளி விளையாட்டுத் திடல்

நேரம் : பிற்பகல்

கதை மாந்தர் : சுப்பையா (இரண்டாம் படிவ மாணவன்),

அறிவுமதி (முதலாம் படிவ மாணவன்). குள்ளப்பன் (மூன்றாம் படிவ மாணவன்)

நிலை : மாணவர்கள் விளையாட்டில் ஈடுபடுதல்; குள்ளப்பன் குழப்பம் விளைவித்தல்; மாணவன் அறிவுமதி தாக்கப்படுதல்.

சுப்பையா : இன்று நம் ஆசிரியர் நமக்குக் காற்பந்து விளையாடப் பயிற்சி அளிப்பார். அப்பயிற்சி நான்கு மணிக்குத் தொடங்கும். ஆசிரியர் சரியான நேரத்திற்கு வந்துவிடுவார். இன்னும் 15 மணித்துளிகள் உள்ளன. அதுவரை ஆயத்தப் பயிற்சிகளில் ஈடுபடச் சொன்னார். குழுத் தலைவன் என்னும் முறையில் என்னைக் கவனித்துக் கொள்ளச் சொன்னார்.

குள்ளப்பன் : நீ என்னைவிடச் சிறியவன். நான்தான் உங்களை வழிநடத்துவேன். எல்லாரும் நான் சொல்வதைக் கேட்க வேண்டும்.

சுப்பையா : குள்ளப்பா! வழக்கம் போல் தகராறு செய்யாதே. நான்தான் இந்த குழுவுக்குத் தலைவன்.

அறிவுமதி : ஆமாம். சுப்பையாதான் தலைவர். தலைவர் சொல்படிதான் நாம் நடக்க வேண்டும்.

குள்ளப்பன் : என்னைப்பற்றி உங்களுக்குத் தெரியும். ஒழுங்காக என் சொல்படிதான் எல்லோரும் நடக்க வேண்டும்.

அறிவுமதி : ஆசிரியர் வரும்வரை நாம் ஆயத்தப் பயிற்சியில் ஈடுபடுவோம். நம் தலைவர் சுப்பையாதான் வாருங்கள். நாம் எல்லோரும் செல்வோம். (மாணவர்கள் எல்லோரும் சுப்பையாவுடன் செல்லுதல்)

குள்ளப்பன் ஒரு கல்லை எடுத்து அறிவுமதியை நோக்கி வீசுதல்).

சுப்பையா : (பதற்றத்துடன்) எல்லாரும் இங்கே வாருங்கள்!

குள்ளப்பன் எறிந்த கல் அறிவுமதியின் தலையில் பட்டுவிட்டது. இலேசாக இரத்தமும் கசிகிறது. நல்ல வேளை. அதோ ஆசிரியரும் வந்துவிட்டார்!

திருமணி : இங்கே என்ன கூட்டம்?

சுப்பையா : ஐயா! குள்ளப்பன் பெரும் தகராறு செய்தான். அறிவுமதி குழுத்தலைவர் சொற்படிதான் நடக்க வேண்டு என்றான். அதனால் குள்ளப்பன் ஆத்திரப்பட்டான். அவன் வீசிய கல் அறிவுமதியின் நெற்றியில் பட்டுவிட்டது.

திருமணி : குள்ளப்பன் எங்கே?

சுப்பையா : அவன் இங்கிருந்து ஓடிவிட்டான் ஐயா.

திருமணி : சரி, அவனை நான் பார்த்துக் கொள்வேன். முதலில் அறிவுமதிக்கு முதல் உதவி செய்ய வேண்டும். அறிவு மதியை நான் அழைத்துச் செல்வேன். உங்களுக்குப் பயிற்சி அளிக்க வேறொரு ஆசிரியரை அனுப்புவேன்.

(இப்படிக் கூறிவிட்டு அறிவுமதியைத் தம்முடன் அழைத்துச் செல்கிறார் ஆசிரியர்).

(காட்சி முடிவு)

காட்சி – 2

இடம் : ஓடிக்கொண்டிருக்கும் ஊர்தி

நேரம் : மாலை

கதை மாந்தர் : திருமணி (ஆசிரியர்), அறிவுமதி (மாணவன்)

நிலை : ஆசிரியர் திருமணியும், அறிவுமதியும் உரையாடுதல்.

திருமணி : அறிவுமதி உன்னை மருத்துவமனைக்கு அழைத்துச் செல்ல நினைத்தேன். அப்பாவுடன் தொலை பேசியில் தொடர்பு கொண்ட போது உன்னை மருத்துவமனைக்கு அழைத்துச் செல்ல வேண்டா; வீட்டிற்கு அழைத்து வருமாறு கூறினார்.

அறிவுமதி : அப்பாவுடைய நண்பர் ஒரு பெரிய டாக்டர். அவர் வீட்டிற்கே வந்து என்னைக் கவனிப்பார்.

திருமணி : குள்ளப்பனை இப்படியேவிடக் கூடாது. அவன் கொடும் செயல்களுக்கு ஒரு முடிவு கட்ட வேண்டும். அப்பாவுடன் கலந்து பேசுவேன்.

அறிவுமதி : “அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை

ஆரிருள் உய்த்து விடும்” (121) என்ற குறளைப் பலமுறை சொல்லி அவனைத் திருத்தப் பார்த்தீர்கள். ஆனால் அவன் திருந்துவதாகத் தெரியவில்லை.

திருமணி : அடக்கம் உயர்ந்த - தெய்வத்தன்மையை ஏற்படுத்தும்; பிறர் மதிக்கத்தக்கச் சிறப்பைத் தரும். அடங்காமை பொல்லாத இருள் போலத் தீமையை உண்டாக்கிவிடும். அதனால் ஒவ்வொருவரும் அடக்கத்தைக் கடைப் பிடித்து வாழவேண்டும்.

அறிவுமதி : நீங்கள் அவனை நேரடியாகக் கவனித்தால் திருத்தி விடலாம் ஐயா.

திருமணி : முயல்வேன் அறிவுமதி. அவனால் நம் பள்ளிக்கும் கெட்ட பெயர் ஏற்பட்டுவிடக் கூடாது என்று அஞ்சுகிறேன்.

அறிவுமதி : அப்பாவிடம் கேளுங்கள் ஐயா. அவர் உங்களுக்கு நல்வழி காட்டுவார்.

திருமணி : ஆகட்டும் அறிவுமதி. அதோ நாம் வீட்டை நெருங்கி விட்டோம். வீட்டில் அம்மா இருக்கிறார்கள் அல்லவா?

அறிவுமதி : அம்மா மாமா வீட்டிற்குப் போய் இருக்கிறார்கள். இன்றிரவு திரும்பி வந்துவிடுவார்கள்.

திருமணி : ம்.......இறங்கு அறிவுமதி. நீ முன்னால் செல்; நான் பின்னால் வருவேன்.

அறிவுமதி : சரி. வாருங்கள் ஐயா. (இருவரும் செல்லுதல்)

(காட்சி முடிவு)

காட்சி – 3

இடம் : வெற்றிவேலர் இல்லம்

நேரம் : மாலை

கதை மாந்தர் : வெற்றிவேலர் (அறிவுமதியின் தந்தை), திருமணி, அறிவுமதி.

நிலை : ஆசிரியர் திருமணி வெற்றிவேலரிடம் நடந்தவற்றைக் கூறுதல். குள்ளப்பனைப் பற்றி ஒரு முடிவெடுத்தல்.

வெற்றிவேலர் : வாங்க ஐயா! அறிவுமதிக்குப் பாதிப்பு ஏதும் அதிகம் இல்லையல்லவா?

திருமணி : இலேசான காயம்தான் ஐயா.

(அறிவுமதியின் தலைப்பகுதியைக் காட்டி) பாருங்கள் ஐயா. இலேசான காயம்தான்.

வெற்றிவேலர் : ஆம். இலேசான காயம்தான். ஆனால், நெற்றியில்பட்ட கல், கண்ணில் பட்டிருந்தால்......

திருமணி : நினைக்கும் பொழுது நெஞ்சம் பதறுகிறது ஐயா.

வெற்றிவேலர் : அறிவுமதி! நீ போய் ஓய்வெடுத்துக்கொள். இன்னும் சிறிது நேரத்தில் டாக்டர் வந்து விடுவார். அவரிடம் காட்டலாம்.

அறிவுமதி : சரிங்க அப்பா. எனக்கு இலேசான வலிதான்.

வெற்றிவேலர் : எதற்கும் டாக்டரிடம் காட்டலாம் என்ன செய்யலாமென்று அவர் முடிவெடுப்பார்.

திருமணி : ஐயா! அந்தக் குள்ளப்பனைப் பற்றி ஒரு முடிவெடுக்க வேண்டும்.காவல் அதிகாரியிடம் சொல்லி அவனைக் கைது செய்யச் சொல்லலாமா?

வெற்றிவேலர் : அது பெரிய விளைவுகளை ஏற்படுத்திவிடும். அவன் வாழ்வே சீரழிந்துவிடும். என் மகனால் இன்னொரு மாணவன் பாதிக்கப்படுவதை நான் விரும்பவில்லை.

திருமணி : அவன் பள்ளியில் இதுவரை பல கொடிய செயல்களைப் புரிந்திருக்கிறான் ஐயா.

வெற்றிவேலர் : ஆசிரியர் என்பர். மாணவர்களிடம் காணப்படும் குறைகளை அகற்றி அவர்களை நல்லவர்களாக ஆக்குவது தானே?

திருமணி : முயன்று கொண்டுதான் இருக்கிறோம். அவன் தொடர்ந்து மிகக் கொடிய செயலைச் செய்து கொண்டிருக்கிறான். இன்று.....

வெற்றிவேலர் : அவன் ஒன்றும் கொடிய விலங்கு இல்லையே. அவன் குடும்ப நிலை என்னவோ? வாழும் சூழல் எப்படியோ?

எல்லாவற்றையும் கண்டறிந்து பொருத்தமான நடவடிக்கையை மேற்கொள்ளுங்கள்.

திருமணி : ஐயா! நீங்கள் எத்துணை உயர்ந்தவர்! குறள் கற்றவர் அல்லவா? பள்ளி அளவில் நாங்கள் முயலுவோம் ஐயா.

வெற்றிவேலர் : முதலில் பெற்றோரை அழைத்துப் பேசுங்கள். அவர்களுக்கு நல்ல ஆலோசனை கூறுங்கள். பையன் திருந்தாவிட்டால் சிறுவர் சீர்திருத்தப் பள்ளிக்கு அனுப்பி விடுவோம் என்று கூறுங்கள்.

திருமணி : சரி ஐயா. அவன் படிப்பில் ஒன்றும் மோகம் இல்லை. நடுத்தர மாணவந்தான்.

வெற்றிவேலர் : அவனைத் திருத்தி விடலாமே! சின்னச் சின்ன கதைகளை, கவிதைகளை அவனுக்குப் படிக்கக் கொடுங்கள். பெற்றோரை அவன்மேல் தனிக் கவனம் செலுத்தச் சொல்லுங்கள். அன்போடு அணுகச் சொல்லுங்கள்.

திருமணி : அப்படியே செய்வோம் ஐயா. அவனைத் திருத்தி விடலாம் என்னும் நம்பிக்கை தோன்றுகிறது.

வெற்றிவேலர் : நம்பிக்கைதான் வெற்றிக்கு அடிப்படை.

திருமணி : ஐயா! பணிவுடமை எல்லார்க்கும் நன்மை பயக்கும் என்ற திருவள்ளுவர், செல்வம் படைத்தவரிடம் காணப்படும்

பணிவுடைமை அவரிடம் உள்ள வேறொரு செல்வமாக மதிக்கப்படும் என்றார் திருவள்ளுவர்.

(அப்போது அங்குவந்த அறிவுமதி)

அறிவுமதி : "எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளம்
செல்வர்க்கே செல்வம் தகைத்து" (125)
என்பதுதானே அதற்குரிய குறள்.

திருமணி : ஆமாம். அறிவுமதி. நீ தந்தையிடம் நிறைய திருக்குறளை கற்றதால்தான் இத்துணை உயர்ந்த மாணவனாக விளங்குகிறாய்.

வெற்றிவேலர் : ஐயா! வாருங்கள் சிற்றுண்டி அருந்தலாம். இன்னும் சிறிது நேரத்தில் டாக்டர் வந்துவிடுவார். அறிவுமதியை நாங்கள் பார்த்துக் கொள்வோம்.

திருமணி : நல்லது ஐயா. இன்று நான் உங்களைச் சந்தித்ததால் எத்தனையோ பயனுடைய வழிகளைத் தெரிந்து கொண்டேன். உங்களுக்கு என் நன்றி.

வெற்றிவேலர் : சரி. வாருங்கள் சிற்றுண்டி அருந்துவோம்.

- முற்றும் -

கற்க கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.

# குறள் விருந்து



தி.பி.2053 கார்த்திகை-8 *திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ்* பொ.ஆ.2022- நவம்பர் -24

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்









குறளைக் கற்போம் குழந்தைகளே

குன்றெனப் புகழைக் குவிப்போமே

பிஞ்சு வயதினில் கற்றிடும் குறளால்

நெஞ்சில் நன்னெறி விதைப்போமே

சிறுவர்கள் பயிலும் குறள்நெறியால்

பெருமைகள் பலவும் சேர்ப்போமே

வள்ளுவர் தந்த வான்மறையால்

வாழ்வில் சிறப்புடன் உயர்வோமே

நாடும் வீடும் நலம் பெறவே

நாளும் குறளைக் கற்போமே

கசடறக் கற்றுத் தெளிவோமே

கற்றபின் அதன்வழி நிற்போமே

வல்லமை பெற்று உழைப்போமே

வல்லரசாக நாட்டை அமைப்போமே

சிறப்பாசிரியர்:மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன்

பொறுப்பாசிரியர்:திருமதி தாமரை சீனிவாச ராவ்

ஆசிரியர்: மறைமலை இலக்குவனார்

குறள் விளக்கக்கதை

# சான்றாண்மை



--திருமதி.தாமரை சீனிவாசராவ்

இந்த இதழின் பொறுப்பாசிரியர்.சிறந்த எழுத்தாளர்.பேச்சாளர்.

கம்போடியாவில் செயற்பட்டுவரும் ஆங்கோர்த் தமிழ்ச் சங்கத்தின் பொருளாளர்.

ஒரு கிராமத்தில் மரவெட்டி ஒருவர் இருந்தார்.அவர் தினமும் தன் கடமைகளை ஆற்றி வந்தார்.காலையில் எழுந்தது முதல் மாலை வரை உழைத்து விட்டு திரும்பும் கடின உழைப்பாளராக இருந்து வந்தார்.தன் வேலையை மிகவும் சிறப்பாக செய்வதும்,வீடு திரும்புவதும் அவரது வாடிக்கையாக வைத்திருந்தார். ஊராரிடமும்,அக்கம் பக்கத்தினரிடமும்,மிகவும் பணிவாக நடந்து கொள்வார்.அனைவருக்கும் அவரைப் பிடிக்கும்.தன் குடும்பத்தாரை நல்ல நிலையில் வைக்க வேண்டும், வறுமையை ஒழித்து அவர்களை மேல் நிலைக்குக் கொண்டு செல்ல வேண்டுமென உறுதிக் கொண்டிருந்தார்.

வீட்டில்,அவரது மனைவி அடிக்கடி திட்டுவார்.நீங்கள் இப்படி உழைத்து என்ன செல்வத்தை நாம் கண்டோம்?வருகிற வருமானம் குடும்ப செலவுக்குக் கூட போதவில்லை.இதில் காலையிலிருந்து நீங்கள்

உழைப்பது மட்டும் தான் மிஞ்சுகிறது.பிள்ளைகளுக்காவது ஏதாவது

வாங்கிக் கொடுக்க முடிகிறதா? என்று கூச்சலிட்டுக்

கொண்டிருந்தார்.அதற்கு அந்த மரம் வெட்டும் உழைப்பாளி,என்னை

என்ன செய்யச் சொல்கிறாய்,நான் முழுவதும் என் கடமையைச்

செய்கிறேன்.கடினமாக உழைக்கிறேன்,அதற்குரிய பணத்தை

பெறுகிறேன்.கவலைப்படாதே நாமும் ஒரு நாள் நல்ல நிலைமைக்கு

வருவோம் என்றார்.இதையே கூறிக் கொண்டிருந்தால் ஒன்றும் முன்னேற

முடியாது என்று கோபமாகப் பேசி அவர் மனைவி திட்டிவிட்டுச்

சென்றார்.



ஆனால் மெல்லிய புன்னகையோடு அவர் அந்த இடத்தை விட்டு

தன்னுடைய வழக்கமான வேலைக்கு கிளம்பினார்.அப்போது அவருடைய

நெருங்கிய நண்பரான மணி அங்கே வந்து,"என்னப்பா எப்படி

இருக்கற?வேலையெல்லாம் எப்படி போகுது? வீட்டுல எல்லாம் நலமா”

என விசாரித்துக் கொண்டிருந்தார்.

“எல்லோரும் நலமா இருக்கோம் மணி. எப்போதும் செய்ற வேலைய தான்”

என்றார்.

அப்போது,அந்த நண்பர் “எங்கப்பா நீ,சொன்னா நீ எங்க கேட்கிற?என்

கூட வா,பக்கத்து மாநிலத்துல விலை அதிகமான சந்தன மரக் கிடங்குல

நாங்க வேலை பார்க்கிறோம்.கூலி நல்லாத் தராங்க.நிறைய பணம்

கிடைக்கும்.நாமும் வசதியா வாழ்ந்து பார்க்கலாமே” என்றார்.

“நல்லா சொல்லுங்க அண்ணே,நான் சொல்லி,சொல்லி

அலுத்துவிட்டேன்.வெளியில எங்காவது வேலைக்குப் போய்,உங்களைப்

போல நாலு காசு சம்பாதிக்க சொன்னா கேட்க மாட்றாரு” என்று அவர்

மனைவி கூறினார்.

அவர் சென்றவுடன், அந்த மரம் வெட்டும் தொழிலாளிதன் மனைவியிடம்

“,இதோ பாரும்மா இப்போ நாம நிம்மதியா தானே இருக்கோம்.நமக்குத்

தேவையான உடை,உணவு எல்லாம் இருக்கின்றன.பிள்ளைகளும் நன்கு

படிக்கிறார்கள்.அவர்கள் வளர்ந்து நாளை நல்ல வேலைக்குச்

செல்வார்கள்.கண்டிப்பாக நம்ம சூழ்நிலை மாறும்.அது மட்டுமல்ல,

மணியும் சில நண்பர்களும்,நம்ம உறவினர்களும் அந்த வேலைக்குப்

போகிறார்கள் என்றால் அது அவர்கள் விருப்பம்.இது நாம வழி வழியாக

செய்து வரும் தொழில்.இதில் யாருக்கும் எந்த பாதிப்பும் இல்லை.சிறு சிறு தொழிலுக்காக நாம் மரத்தை வெட்டினாலும்,குறைந்த வருமானமே ஈட்டினாலும்,என் பூமித் தாய்க்கு எவ்வித பாதிப்பும் இல்லாமல் அவளை வைத்து நான் பிழைக்கிறேன்.அந்த இயற்கை அன்னை என்னை ஒரு போதும் கைவிடமாட்டாள்" என்றார்.

அப்போது அவர்களுடைய மகள் வெண்மணி ஓடி வந்தாள்.

"அப்பா,இங்க பாருங்க,இந்த அரையாண்டுத் தேர்வுல நான் தான் முதல் மதிப்பெண் வாங்கியிருக்கிறேன்.ஆசிரியர் என்னை பாராட்டினார் அப்பா" என்று மகிழ்ச்சியோடு கூறினாள்.

"என்னம்மா சொன்னாங்க" என்று ஆவலுடன் அப்பா கேட்க, "அதாவது வறுமையான சூழ்நிலையிலும் எவ்வளவு பொறுப்புடன்,பிறர் மீது அக்கறையுடன்,பெரியோர்களை மதித்து நடப்பதிலிருந்து,சிறப்பாக நடந்து கொள்கிறாள் வெண்மணி"ன்னு,பாராட்டினாங்க.

பிறகு எல்லாப் பெற்றோரும் இதையே தானே எண்ணுவார்கள்! அதற்காக சிறிய முயற்சி செய்து அவர்களுக்காக இன்னும் கொஞ்சம் கடின உழைப்பு செய்து படிக்க வேண்டும் என்று அறிவுரை கூறினார்கள்.எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது அப்பா என்றாள்.

"கட்டாயமாக நான் நன்கு படித்து உங்களுக்கு நற்பெயர் வாங்கித் தருவேன் அப்பா" என்றாள்.அவள் அம்மா அப்படியே கட்டியணைத்து

முத்தமிட்டார்கள்.அழகாக பேசும் தங்கள் மகளின் அழகை அப்படியே பூரித்துப் போய் பார்த்துக் கொண்டிருந்தார்கள் தாயும்,தந்தையும். இப்படியாக நாட்கள் கடந்துச் சென்றன.அப்போது ஊருக்குள் திடீரென ஒரே சலசலப்பு.அனைவரும் கூச்சலிட்டும்,பரபரப்பாக அங்குமிங்கும் ஓடிக் கொண்டு இருந்தனர்.என்னவென்று தெரியாமல் வெண்மணியின் அம்மா வெளியில் பார்க்கும் போது அழுகைச் சத்தம் அதிகமாகக் கேட்க ஓடிப் போய் மணி அண்ணன் வீட்டில் பார்க்க,அங்கே மணியின் மனைவி,அக்கா,எங்க வீட்டுக்காரர போலீஸ் சுட்டுட்டாங்களாம் என்று கதறி கண்ணீர் விட்டார்.எவ்வளவோ சொன்னேனே....அந்த ஆடம்பர வாழ்க்கையெல்லாம் வேண்முன்னு..இப்படி எங்களை விட்டுட்டு போயிட்டாரே என்று கதறித் துடித்தாள்.அச்சச்சோ,என்ன கொடுமை இதுன்னு அனைவரும் பேசிக் கொண்டு இருக்க,ஒரு பெரியவர் ஆமாங்க,மரம் வெட்டப் போன இடத்துல,சில பேர் மாட்டிக்கிட்டாங்க,கொஞ்சம் பேரை கைது செஞ்சுட்டாங்களாம்.கொஞ்ச பேர் தப்பித்து காட்டுல கிடக்குறாங்களாம்.ஆனா துப்பாக்கி சூடு நடத்தி வேற கொன்னுட்டாங்க.கேட்கவே நெஞ்சு பதறுது. நம்ம ஊருல மட்டும் பத்தொன்பது பேருன்னு சொல்றாங்க.ஒண்ணுமே புரியல என்று கவலையாகப் பேசிக் கொண்டிருந்தார்.

வழக்கமாக வேலை முடித்து வீடு திரும்பிய தொழிலாளி,ஒன்றும் புரியாமல் ஊருக்குள் நடந்து வந்தார்.அவரின் மற்ற நண்பர்கள் ஓடி வந்த தகவலைக் கூற,அவரும் பதறியடித்துக் கொண்டு வீட்டினருகே ஓடி வந்தார்.மணியின் மனைவியைக் கண்டு கலங்கினார்.ஆறுதல் கூறி தேற்ற முடியாமல் தவித்தார்.

அப்போது ஊர் மக்கள் சிலர்,ஓடி ஓடி பணம் சம்பாதிச்சான்,ஆனா அது வச்சு வாழ குடுத்து வைக்கலையே என்று கவலையாய்,பேசினார்கள்.இன்னும் சிலரோ,நாம் சொன்னால் யார் கேட்பது?அது தவறான தொழில், ஆபத்தானது என்று கூறினால் யார் கேட்பது என்று நொந்து கொண்டார்கள்.

பணம்,செல்வம் சேர்ப்பது மட்டும் வாழ்க்கையாகாது.அதைச் சரியான வழியில் தகுதியான வேலையைத் தேர்வு செய்து வாழ்வதே சிறந்தது.ஏழ்மை நிலையிலிருந்தாலும் தெளிந்த அறிவோடு,நாம் வாழும் சூழலைப் பேணி சிறப்பாக வாழ்வதே சிறந்தது என்று அத் தொழிலாளி உணர்ந்திருந்தார்.வறுமை கூட அவர் நல்ல மனதின் முன் இழிவாகத் தோன்றவில்லை.அதே போல எவ்வளவு பெரிய ஆபத்திலிருந்து தன் கணவர் தப்பித்தார் என்பதை எண்ணி அவரது மனைவி நிம்மதி பெருமூச்சு விட்டார்.இந்த எளிமையான வாழ்க்கையே சிறந்த வாழ்க்கை என்று தெளிவாகப் புரிந்துக் கொண்டிருப்பார்.மற்றவர்களோடு ஒப்பிட்டு

வாழ்வதும்,பொறாமைப் பட்டு வாழ்வதும்,என்றும் அவரவர்க்கு சரியான வாழ்க்கையைத் தராது.நமது கடமையைச் சரியாக செய்து சீரான வாழ்க்கையை மேற்கொண்டாலே உறுதியாக நாம் சிறந்த வாழ்க்கையை வாழ முடியும் என்பதே உண்மை.நற்குணங்களும்,வாய்மையும் என்றும் உயர்வைத் தரும்.

இன்மை ஒருவருக்கு இளிவன்று சால்பென்னும்

திண்மை உண்டாக பெறின். குறள் எண் : 988

நற்குணங்கள் என்னும் வலிமையை ஒருவர் கொண்டிருந்தால் அவருக்கு வறுமை ஒரு போதும் இழிவும் தராது.மனித மனம் நல்ல எண்ணங்கள் மட்டுமே பெற்றிருப்பதில்லை.சூழ்நிலைகள் ஒரு மனிதனை தவறுகள் செய்ய வைத்தாலும்,தீங்கு செய்ய வைத்தாலும்,சிலருக்கு பிறவியிலேயே அந்த எண்ணங்கள் வந்துவிடும்.மற்றவர்களைப் பற்றி குறை சொல்லியும், ஒருவருக்கு தீங்கு செய்கிறோம் என்பதைத் தெரிந்து கொண்டே தங்களுடைய வசதிக்காகவும்,வாழ்க்கை மேம்பாட்டிற்காக பல இழிவான காரியங்களைச் செய்யவும் அஞ்ச மாட்டார்கள்.அவ்வாறு வாழ்பவர்கள் மேன்மை நிலையில் இருந்தாலும் இழிவானவர்களே.மாறாக வறுமை நிலையில் இருந்தாலும் நற்குணங்களும் நிறைந்திருப்பதால் அவரைப் பாராட்டவே செய்வர்.உயர்ந்தவராகவே போற்றப்படுவர்.அறமெனும்

குணம் போற்றி வாழ்பவர்கள் வாழ்க்கையில் துன்பங்கள்

வந்தாலும்,கடந்து செல்வதையும், பார்க்கிறோம்.

## நெஞ்சில் பொறாமை



செல்வன் செ.குருபரன்

பன்னிரண்டாம் வகுப்பு- 'பி' பிரிவு

பள்ளி மாணவர்கள் படைப்புகள் மகிழ்வுடன் வரவேற்கப்படுகின்றன.
குறள் விளக்கக் கதைகள்,நாடகங்கள்,கட்டுரைகள்,கவிதைகள் ஆகியவற்றை
anjal@kuralvirtual.com எனும் மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்புங்கள்

ஒரு துறவி ஒருநாள் நல்ல வெயிலில் நடந்து சென்றார். அப்போது அவரது செருப்பு பிஞ்சுபோச்சு. தொடர்ந்து நடக்கமுடியாதவராக அருகே இருந்த செருப்பு தைப்பவனிடம் சென்றுகொடுத்தார். அவரோ அந்தச் செருப்பைப் பார்த்துவிட்டு

“ஐயா நிறைய தைக்கவேண்டியிருக்கிறது. நீங்கள் உங்கள் செருப்பைத் தந்துவிட்டு. மாலை வாருங்கள் தைத்து வைக்கிறேன்” என்றார்.



துறவியோ அந்த செருப்புத் தைப்பவரிடம்..

“ஐயா இந்த வெயிலில் நான் எவ்வாறு நடந்துபோவேன்..?” என்றார்.

அதற்கு அந்தச் செருப்பு தைக்கும் தொழிலாளி...

“ஐயா உங்களுக்கு வேண்டுமானால் நான் வேறு செருப்புத் தருகிறேன். இதை அணிந்துகொண்டு செல்லுங்கள். மாலை வரும்போது இந்தச் செருப்பைத் தந்துவிட்டு. உங்கள் செருப்பைப் பெற்றுச் செல்லுங்கள்” என்றார்.

ஒரு நொடி சிந்தித்த அந்தத் துறவி...

என்னது இன்னொருவர் செருப்பை நான் அணிவதா...!!

என்று சிந்தித்தார்..

அவர் மனச்சாட்சி பேசியது..

“இன்னொருவர் செருப்பை அணிவதற்கே இவ்வளவு சிந்திக்கிறோமே..

இன்னொருவர் பற்றிய தவறான எண்ணங்களையும்,

அவர் மீதான கோபத்தையும்,

பொறாமையையும் இறக்கிவைக்காமல் தூக்கிசுமக்கிறோமே... என்று

(இன்னொருவர் பற்றிய தவறான எண்ணங்களை நம் மனதில் சுமப்பது,
இன்னொருவர் செருப்பை அணிவதுபோல இழிவானது)

ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்

தழுக்கா றிலாத இயல்பு- குறள் 161:

(ஒருவன் தன் நெஞ்சில் பொறாமை இல்லாமல் வாழும் இயல்பைத் தனக்கு உரிய
ஒழுக்க நெறியாகக் கொண்டு போற்ற வேண்டும்.)



**தமிழகத்தில் முதன்முறையாக மாற்றுத்திறன் குழந்தைகள் பூங்கா:**

<u>மதுரையில் சிறப்பு வசதிகளுடன் அமைக்கப்படுகிறது</u>

முதன் முறையாக தமிழகத்தில் மதுரை மாநகராட்சியில் மாற்றுத்திறன்

குழந்தைகளுக்காக பொது நிதி, தனியார் நிதியுதவி பெற்று ரூ.40 லட்சத்தில் நவீன

பூங்கா ஒன்றை வடிவமைத்துள்ளனர்.

மாற்றுத்திறன் குழந்தைகளும், சராசரி குழந்தைகளைப் போல ஊஞ்சல் விளையாட ஆசைப்படு வர். ஆனால், கீழே விழுந்து விடு வோம் என்ற அச்சத்தில் விளை யாட மாட்டார்கள். அவர்கள் ‘சீட்’ பெல்ட்( இருக்கைப் பட்டி) அணிந்து தனியாக ஆடுவதற்கும், நடக்க முடியாத குழந்தைகள் வீல் சேருடன் அமர்ந்தும், பெற்றோருடன் அமர்ந்து ஆடுவதற் கும் பிரத்தியேகமாக ஊஞ்சல்கள் வடிவமைக்கப்பட்டுள்ளன.

சறுக்கு விளையாட்டில் சாதாரண குழந்தைகள் வேகமாக சறுக்கி கீழே விழுந்து விடுவர். அப்படி விளையாடுவதற்கு ஆட்டிசம், மன வளர்ச்சிக் குழந்தைகள் அச்சப்படுவர். அதனால், மெதுவாக விழும் வகையில் (ரோலர் ப்ளேடு) சறுக்கு விளையாட்டு உபகரணம் உள்ளது. மற்றொருபுறம் உருள்நாற்காலியில் சென்று விளையாடும் கூடைப்பந்துத் திடலும் ஆயத்தமாகிறது.
மாற்றுத்திறன் குழந்தைகள் நடப்பதற்கு ஏற்ப தனித்திறன் அமைந்த தரையோடுகளைக் கொண்டு பூங்காவின் தரைத்தளம் அமைக்கப்பட்டுள்ளது.

பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந் தாள்வினை இன்மை பழி

பொறியின்மை யார்க்கும் பழியன்று அறிவறிந்து

ஆள்வினை இன்மை பழி.-- குறள் 618:

: உடல் உறுப்பு, செயலற்று இருப்பது குறை ஆகாது. அறிய வேண்டியவதை அறிந்து முயற்சி செய்யாது இருப்பதே குறை.

கற்க கசடற க் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.



# குறள் விருந்து




தி.வ.ஆ.-2053 மார்கழி- 9 பொ.ஆ.-2022 திசம்பர்-24

திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ்

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்









குறளைக் கற்போம் குழந்தைகளே

குன்றெனப் புகழைக் குவிப்போமே

பிஞ்சு வயதினில் கற்றிடும் குறளால்

நெஞ்சில் நன்னெறி விதைப்போமே

சிறுவர்கள் பயிலும் குறள்நெறியால்

பெருமைகள் பலவும் சேர்ப்போமே

வள்ளுவர் தந்த வான்மறையால்

வாழ்வில் சிறப்புடன் உயர்வோமே

நாடும் வீடும் நலம் பெறவே

நாளும் குறளைக் கற்போமே

கசடறக் கற்றுத் தெளிவோமே

கற்றபின் அதன்வழி நிற்போமே

வல்லரசாய் நாட்டை வளர்ப்போமே

வல்லமை பெற்றிட உழைப்போமே

சிறப்பாசிரியர்: முனைவர் முரசு நெடுமாறன் பொறுப்பாசிரியர்: திருமதி.தாமரை சீனிவாச ராவ்

ஆசிரியர்:மறைமலை இலக்குவனார்



# வணக்கம்.வாருங்கள்.





எப்படி இருக்கிறீர்கள்?நலம் தானே?
அரையாண்டுத் தேர்வும் மாதிரித் தேர்வும் எழுதிக் களைத்திருப்பீர்கள்.
நம் தாமரை சீனிவாசராவ் பெரியம்மா தடபுடலாக விருந்து ஆயத்தம் செய்துவைத்துள்ளார்கள்.தெவிட்டாத கருத்து விருந்து.அறிவுக்கு வளர்ச்சி நல்கும் கருத்து விருந்து.வழக்கமாகக் குறள் விளக்க நாடகம் வழங்கும் முரசு தாத்தா இன்று வழங்கமுடியவில்லை.அவர் தமது தாயகம் மலேசியாவை விட்டுக் கிளம்பி நம் தமிழ்நாட்டுக்கு வந்துள்ளார்.
நான் ஏதாவது ஒரு பக்கம் எழுதி அனுப்புவேன்.தாமரை பெரியம்மாவோ மறைமலை தாத்தாவோஅதைத் திருத்தி வெளியிடுவார்கள்.நானும் மாதிரித்தேர்வுக்கு ஆயத்தமாவதால் எழுதி அனுப்பமுடியவில்லை.
இதனால் எல்லாச் சுமையும் தாமரை பெரியம்மாவுக்கே.
"இன்றைய தலைவர்களின் சிந்தனைக்கு" ஒரு குறள் பாடலைக் கூறி அதற்கு அருமையான விளக்கம் வழங்கியுள்ளார்கள்.
பல்லுயிர்ச் சூழல் பாதுகாப்பு வலியுறுத்தப்பட்டு வரும் இவ் வேளையில் அதன் தேவையை நாம் விளங்கிக்கொள்ளும் வகையில் சுவையாக அளித்துள்ளார்கள்.'அனைத்து உயிர்களிடமும் அன்பு செலுத்துவோம்' என்னும் தலைப்பில் சிந்தனையைத் தூண்டும் கதையை அல்ல அல்ல எழுத்தோவியத்தை வரைந்துள்ளார்கள். பல்லுயிர்ச் சூழல் பாதுகாப்புக்குப் பொருத்தமான இந்தக் கதை மன்னுயிர்க்கு இரங்கும் வள்ளலாரின் அருள்நெறிக்கு வழிகாட்டியாகவும் விளங்குகிறது அல்லவா?
அருள்சோதி வள்ளலார் இம் மண்ணுலகுக்கு வந்து இருநூறு ஆண்டுகள் ஆன சூழலில் அருள்நெறி போதிக்கும் தாமரை பெரியம்மாவின் கதையை நாம் படிப்பதுடன் நம் நண்பர்களுக்கும் பகிர்ந்திட வேண்டும்.சரிதானே!சரி..சரி..நானே வளவள என்று பேசிக் கொண்டிருந்தால் நீங்கள் உள்ளே சென்று படிக்கமுடியுமா?
எனவே விடைபெறுகிறேன்.போகும் முன் ஒரு வார்த்தை.
நீங்கள் இந்த மின்னிதழைப் படித்தபின் மின்னஞ்சல் மூலமோ புலனம் (வாட்சு-அப்)மூலமோ உங்கள் நண்பர்களுக்குப் பகிர்ந்திடுங்கள்.பத்துப் பேருக்கோ அல்லது பத்துக்கு மேற்பட்டவர்களுக்கு நீங்கள் பகிர்ந்திருந்தால் ஒரு திருக்குறள் நூல் உங்களுக்கு அன்பளிப்பாக வழங்கப்படும்.
நீங்கள் அங்ஙனம் பகிர்ந்த செய்தியையும் உங்கள் முகவரியையும் தெரிவியுங்கள்.நீங்கள் கதையோ ஒரு பக்கக் கட்டுரையோ அனுப்புங்கள்.வெளியிட்டு உங்களுக்குச் சான்றிதழும் பரிசும் வழங்குவார்கள்.உடனே ஆயத்தமாகிறீர்களா? உங்கள் அன்புள்ள,

anjal@kuralvirtual.com செந்தில்.குருபரன்

(உ)ருசிய அதிபர் புதின் கவனத்திற்கு இந்தக் குறளைக் கொண்டுசேர்ப்போம்.

## இன்றைய தலைவர்களின் சிந்தனைக்கு

--திருமதி தாமரை சீனிவாசராவ்



கம்போடியா-ஆங்கோர் தமிழ்ச் சங்கப் பொருளாளர். புதுச்சேரியில் பல சமூக அமைப்புகளில் பொறுப்பு வகித்துப் பொதுப்பணியாற்றிவருகிறார்.பல்வேறு தமிழ் அமைப்புகளுடன் இணைந்து தமிழ்ப்பணியாற்றி வருகிறார்.முற்போக்கு எழுத்தாளர்.முன்னணிப் பாவலர். நம் இதழின் பொறுப்பாசிரியர்.

பிறர்க்குஇன்னாமுற்பகல்செய்யின்தமக்குஇன்னா
பிற்பகல்தாமேவரும். குறள்(319)

பிறருக்கு நாம் தீங்கை ஒருநாளின் முற்பகலில் விளைவித்தால் நமக்கு அத் துன்பம் பிற்பகலில் தாமாக வந்து சேரும். நாம் நம்முடன் இருப்பவருக்கு அல்லது நம்மைச் சேர்ந்தவருக்குச் சில வேளைகளில் ஏதாவது, இடரோ, துன்பமோ செய்ய நினைத்தால், அதே துன்பம் சில குறிப்பிட்ட நேரத்தில் நம்மை வந்துசேரும் என்பதே குறளின் பொருள்.



எந்த ஒரு நிலையிலும் ஒருவருக்கும் கேடு விளைவிக்கக் கூடாது என்ற தூய்மையான எண்ணம் நம்மை உயர்வுக்கு இட்டுச்செல்லும். ஆனால் சில தீய எண்ணங்களால், சிலசமயங்களில் நாம் கொண்ட வஞ்சமும், பகையும் பிறருக்குக் கேடு விளைவித்துவிடுகிறது. அவ் வேளையில் நாம் அவருக்குத் தீங்கு செய்வதாக நினைத்துவிட்டாலும், அத்துன்பமோ அல்லது வினையோ நமக்கும் உடனே திரும்பி வரும். ஆகவே நன்மை செய்தால் அதற்குரிய விளைவும், தீமை செய்தால் தீயவிளைவும் ஏற்படும்.



## உயிரினத்தையும் பயிரினத்தையும் பாதுகாப்போம்

**---தாமரை சீனிவாசராவ்**

ஒருநாள் பள்ளியில் ஆசிரியர் சூழலியல் பாடம் எடுத்துக்கொண்டிருந்தார்.
அவருடைய வகுப்பில், மிகுந்த ஆர்வத்துடன் மாணவர்கள் பயிலும் நேரமாகவே இருக்கும்.
மேலும் ஒரு குறளைச் சொல்லி, அதற்குரிய கதைகளும் சொல்வார். அப்படி ஒருநாள் வகுப்பில், ''இன்று விலங்குகள் பற்றிப் படிப்போமா?'' என்றார். மாணவர்கள் ஆர்வமுடன் ''ஓ!படிக்கலாமே!ஆனாஒருகதையும்சொல்லுங்கஐயா!'' என்றுகேட்டனர்.
''கட்டாயமாகச் சொல்கிறேன்''என்றுபேசஆரம்பித்தார்.



’முன்பெல்லாம் மக்கள்தொகை குறைவாக இருந்த காலத்தில் அவரவர் இடங்களில் அனைத்து உயிர்களும் இன்பமானசூழலில் வாழ்ந்துவந்தன.
காடுகளை,மனிதர்களாகிய நாம் அழிக்கத்தொடங்கி, கட்டிடங்கள் கட்டியும், வேளாண்மைசெய்தும், பொழுதுபோக்கு இடங்களாக மாற்றியும், பல உயிர்களுக்கு இடர்செய்துவருகிறோம். குறிப்பாக யானை, சிங்கம், புலி போன்ற காட்டுவிலங்குகள் மிகவும் வேதனை அடைகின்றன. யானை முதலிய விலங்குகள் ஒருநாள் தன் உணவுத்தேவைக்காகப் பல மைல் தொலைவு நடக்கநேரிட்டது. மேலும் காடுகள் அழிக்கப்பட்ட காரணத்தால் என்னநடந்தது தெரியுமா?
என்று ஆசிரியர் கேட்டார்.

உடனே மாணவர்கள், ‘’ஆமாங்க ஐயா! யானைகள் நிறைய இப்போது உணவு தேடி ஊருக்குள்ளே வந்துவிடுகின்றன, இதனால் ஆட்களையும் கொன்றுவிடுகிறதே…திமிர்பிடித்தயானை …’’ என்றுசிலர்முணுமுணுத்தனர்.
உடனே கெட்டிக்காரமாணவியான மலர் எழுந்து, “மனிதர்களும் தானே தங்கள் சுயநலத்திற்காக மின்வேலிகளை அமைத்து,யானைகளைக் கொல்கின்றனர்,அது பாவமில்லயா?” என்று கோபமாகக் கேட்டாள்.
உடனே ஆசிரியர்,’’சரியாகச் சொன்னாயம்மா, முதலில் நாம் விலங்குகளின் இடத்தைப் பிடித்தோம், அவற்றின் உணவுப்பாதைகள், நீர்த்தடாகங்கள் என அனைத்தையும் அழித்துவிட்டோம். பிறகு உணவுக்கு அவைகள் என்ன செய்யும்? உணவைத் தேடிவரத்தான் செய்யும். பாவம்!’’என்றார்.
‘’பிள்ளைகளே…..நடந்தது போகட்டும், இனி நீங்கள் அடுத்த தலைமுறைகளாவது, அனைத்து உயிர்களையும் பேணி, அவைகளுக்கான வாழும் உரிமைக்கு மதிப்பளித்து, நடந்துகொள்ளவேண்டும் சரியா…’’என்றார்.
‘’சரிங்கஐயா,நீங்கள் சொல்வது போல நாங்கள் இருப்போம். ஆனால் சிறு பிள்ளைகள், நாங்கள் என்ன செய்யமுடியும் ஐயா?’பெரியவர்கள்கேட்பார்களா அல்லது வளர்ந்தபிறகு நாங்கள் எவ்வாறு சூழலைக் காக்கமுடியும் ஐயா’’ என்று முகிலன் கேட்டான். ‘’நாம் நினைத்தால் அனைத்தையும் செய்யமுடியுமா’’ என்றான்.




அதற்கு ஆசிரியர் "நீங்கள் அனைத்தையும் மாற்றமுடியாவிட்டாலும், சூழலுக்குப் பாதகம் இல்லாமல் வாழ்ந்தாலே பாதி நம் கடமையைச் சரியாகச் செய்வதாகிவிடும். அதையாவது ஒழுங்காகச் செய்யலாமே’’என்றார்.
பின்னர்ஆசிரியர், ‘இங்கே வா. உனக்கு விளக்கிச் சொல்கிறேன்., என்றார். முகிலன் அருகில் வந்தான்.

'' நீ தினமும் எங்கே மதியநேரத்தில் அமர்ந்து சாப்பிடுகிறாய் ?'' என்று கேட்டார் 'நம்ம பள்ளியின் பின்புறத்தில்தான் நிறைய மரங்கள் இருக்கே…அங்கேதான் ''என்றான். ''எங்கே அந்த மரங்களின் பெயர்களைக் கூறு'' என்றார். 'நாவல், புன்னை, வேப்பம், மகிழம், சரக்கொன்றை, புளியமரம், மாமரம் நிறைய இருக்கே'' என்றான். ''ஆனால் எனக்குப் பிடித்தது மகிழமரம்தான். அங்கேதான் என் நண்பர்களோடு சாப்பிடுவேன் ஐயா. ஆனா பெரியவகுப்பு அக்கா,அண்ணா கூட அங்கே சாப்பிடுவாங்க…''என்றுகூறினான்.
"ஆமாம் அதைத்தான் நானும் கூறவிரும்பினேன். உனது அண்ணா இங்கே படித்தான் அல்லவா? அவன் உன்னைப்போல சிறுபிள்ளையாக இருக்கும்போது நமது பள்ளியில், சுற்றுச்சூழல்தினம், சூன் 5 ஆம்தேதி கொண்டாடினோம். அப்போதுதான் அச்செடிகள் நடப்பட்டன. அதில் மகிழம் உட்பட சில செடிகளை உன் அப்பாவிடம் சொல்லி எடுத்துவந்தான். அன்று நட்ட செடிதான் இன்று மரமாக வளர்ந்து உங்களுக்கு பயனளிக்கிறது பார்த்தாயா…அன்று செய்த நல்ல செயல் இன்று நமக்கே எவ்வாறு உதவுகின்றது பார்த்தாயா. அதைப் போலத்தான், நாம் இன்று செய்யும் நல்ல செயலோ, தீய செயலோ திரும்பி நம்மை வந்து சேரும். அதனால் பெரியவர்களாகும் போதோ, அல்லது இந்த வயதில் கூட உங்களால் பல சூழலைக் காக்கும் பணிகளோ, அல்லது தெரியாதவர்களுக்கு, உங்களால் சொல்லித் தர முடியும். உறுதியாக எங்களை விட நீங்கள் ஒரு விடயத்திற்காக குரல் கொடுத்தால் அனைவரிடமும் அது எளிதாக சென்று சேரும், புரிகிறதா?" என்று ஆசிரியர் கேட்டார்.

"சரிங்க ஐயா, உண்மையாக எங்கள் படிப்புடன் சேர்த்து நாங்கள் நமது இயற்கை வளங்களையும் காப்போம் என்று உங்களுக்கு உறுதியளிக்கிறோம் என்று அழகாய் ஒன்றுசேர்ந்து கூறினர்.

தன்னுயிர்க் கின்னாமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல் - குறள் 318:
[தன் உயிருக்குத் துன்பமானவை இவை என்று உணர்ந்தவன், அத் துன்பத்தை மற்ற உயிருக்குச் செய்தல் என்ன காரணத்தாலோ.]
என்னும் குறள் சூழலியல் விளக்கமாக அமைந்துள்ளது.
நம்மைச் சுற்றி வாழும் உயிரினங்களையும் பயிரினங்களையும் பாதுகாவாமல் அழித்து ஒழித்துவிட்டால் நாம் பாலைவனத்தில்தான் வெம்பிச் சாகவேண்டும் எனவே இக் குறளின் மூலம் வள்ளுவப் பெருந்தகை எச்சரிக்கிறார்.
மன்னுயிரைத் தன்னுயிர்போல் பாதுகாத்தல் மனிதர்களின் கடமை என வள்ளுவர் அறிவுறுத்துகிறார்.

## அனைத்து உயிர்களிடமும் அன்பு செலுத்துவோம்

**---தாமரை சீனிவாசராவ்**

ஒரு காட்டுல பூர்வக்குடியினர் வாழ்ந்துவந்தாங்க. அவங்க அங்கேயே பிறந்து வளர்ந்தவங்க. காட்டோட ஒவ்வொரு அசைவும் அவங்களுக்குத் தெரியும். அதனால வேட்டையாடுவதும், சிறுசிறு கிழங்குவகைகளைச் சமைத்துச் சாப்பிட்டு வந்தாங்க. சிலவேளையில அவர்களுக்கு விலங்குகளால ஆபத்து இருந்தாலும் அதை பெரிதாக எடுத்துக்கொள்வதில்லை. இப்படியாக இருக்கும் நேரத்துல, அந்தப் பழங்குடி இனத்தைச் சேர்ந்த ஒரு பெரியவர், மலைக்குக் கீழே சில பொருட்கள் வாங்கச் சென்றார். அப்போது வயல்வெளிப் பகுதியில ஒரு தாய் யானையும், குட்டி யானையும் வயல் பாதுகாப்புக்கு அமைக்கப்பட்ட மின்சார வேலியில சிக்கி விழுந்து கிடந்ததுங்க. பதறிப்போன அந்த முதியவர், தாய் யானை அசைவற்றுக் கிடந்த நிலையில் குட்டி யானை சிறிது காலை உதறிக்கொண்டு துடிதுடித்துப் படுத்திருப்பதைப் பார்த்துப் பதறி, குட்டியானையைக் காப்பாற்ற ஓடுகிறார்.

உடனே காட்டு இலாக்கா அதிகாரிகளை அழைத்துவந்து, “ஐயா குட்டிங்க… மனசு பதைக்குது. தாய்தான் போயிடுச்சு “ என்று கதறினார். உடனே அதிகாரிகள் அந்த இடத்திற்கு வந்து யானையைப் பார்க்கின்றனர். தாய் யானை இறந்திருப்பதையும், குட்டி உயிருக்குப் போராடுவதையும் உறுதி செய்த மருத்துவர், ‘’குட்டியும் பிழைக்காது, இரண்டொரு நாளில் இறந்துவிடும்’’ என்று கைவிடுகிறார். அப் பழங்குடி முதியவரோ, ‘’ஐயா அப்படி சொல்லாதீங்க. அரசாங்கம் வைத்திருக்கிற யானைமுகாம் பக்கத்துலதான் நாங்க இருக்கோம். என்கிட்ட நம்பி விடுங்கள். நான் கட்டாயம் அதைப் பிழைக்கவைத்துக் காட்டுகிறேன்’’ என்று.



மன்றாடினார். அவரின் அக்கறையைப் பார்த்த அதிகாரி, சரி பெரியவரே… உங்களை நம்புகிறேன். எங்களுக்கும் அது பிழைக்கணும் என்றுதான் நினைக்கிறோம் என்றார் பின்னர் வழக்கமான முறைமைகளை முடித்துவிட்டுக் குட்டியானையை வண்டியில் ஏற்றி மலைப்பகுதிக்குக் கொண்டுசென்றனர். அந்த முதியவர் வீட்டில் இருந்த தன் மனைவியை அழைத்து, நடந்தவற்றைச் சொன்னார். அவரும் அக் குட்டியானையைப் பார்த்து, "என்ன அழகா இருக்கு" என்று ஆசையாக, 'இந்தப் பிள்ளைக்குப் பேர்வைப்போம் என்று கூறி அம்மு என்று பெயர்வைத்தார். இப்படியாக இரண்டு, மூன்று நாட்கள் சென்றது. உணவே எடுக்காமல், தாய் யானையை நினைத்து ஏங்கிய குட்டியானை சாப்பிட மறுத்தது. ஆனால் அவ்விருவரும் அன்பாக அதைக் கொஞ்சிக்கொஞ்சி அதன் கவனத்தை மாற்றினர். பத்து நாட்கள் கழித்துவந்த மருத்துவருக்கோ வியப்பாக இருந்தது.

'பிழைக்காது,மிகவும்பலவீனமாகஇருக்கிறது'என்றுநினைத்தோமே…எவ்வாறு இப்படி எழுந்து நடந்தது என்று வியப்படைய, அம் முதியவர் "…புள்ள சாமி, நம்ம பிள்ளையாயிருந்தா விட்டுடுவோமா.." என்றதும்.. மருத்துவருக்கு அவர்களின் அன்பு புரிந்தது. "சரிதான் உங்க அக்கறை வருமா? என்று மகிழ்ச்சியாக அவர்களைப் பாராட்டிவிட்டுச் சென்றார். இப்படியாக நாட்கள் செல்ல அம்முவோ அவர்களின் செல்லப்பிள்ளையாகவே மாறிவிட்டிருந்தது. சற்று நேரம் தவறினாலும், செல்லமாக வந்து முட்டியும், தும்பிக்கையால் கையை இழுத்துப் பால்கேட்டுக் குடிக்குமளவுக்கு அம்மு மாறியிருந்தாள்.

ஒருநாள் இரவு குடிசையில், இரவு தூங்கிக்கொண்டிருந்தார்கள். அப்போது குளிருக்குப் போடப்பட்ட நெருப்புக்குவியலில் இருந்து திடீரெனத் தீப்பொறி பரவி குடிசையின் ஓலையில் பட்டு, தீப்பிடிக்க ஆரம்பித்துவிட்டது. சற்றுத் தொலைவில் கட்டிவைக்கப்பட்டிருந்த அம்முவோ, தீப்பற்றியது பார்த்து, மிகவும் சத்தமாக பிளிறத் தொடங்கியது. அந்த அலறல் சத்தத்தில் அக்கம்பக்கத்தினர் ஓடிவந்து இருவரையும் காப்பாற்றி, குடிசையின் தீயையும் நீரூற்றி அணைத்தனர். சற்றுத் தூரத்தில் இருந்த அம்முவோ, அந்தச் சிறு சுவரை இடித்துத்தள்ளி ஓடிவந்து, இருவரிடமும் கொஞ்சி, கொஞ்சி நலம் விசாரித்தது. இந்தக் காட்சியக் கண்ட அனைவரும், கண்கலங்கி,

“தாத்தா என்னைக்கோ நீங்க அதைக் காப்பாற்றி பிள்ளையா வளர்த்தீங்க…. இன்று எப்பேர்ப்பட்ட உதவிய உங்களுக்கு மகளா நின்னுசெய்திருக்கு பாருங்க…
என்றுகூற….கண்கலங்கி இருவரும், “ஆமா எங்க மகள்தான், எங்கமகள்தான்”
என்றுகூற…அந்தமுதியவர்மட்டும் அம்முவைக் காட்டு இலாக்கா அதிகாரிகள் வந்து, மீண்டும் காட்டுக்குள் கொண்டுவிடப் போகும் நாளை எண்ணி மேலும் கலங்கி நின்றிருந்தார்…

அப்படியே கதையை மிகுந்த ஆர்வத்துடன் கேட்டு மாணவர்களும் கண்கலங்க ‘என்ன பிள்ளைகளே, கதை நன்றாக இருந்ததா?’ என்று ஆசிரியர் கேட்க… ‘ஆமாங்க ஐயா… அருமையாக இருந்தது என்றனர். எவ்வளவு பாசம் விலங்குகளுக்குக் கூட’ என்றனர்.

“ஆமாம்,
‘அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
தந்நோய்போற் போற்றாக் கடை ‘ என்கிறார் வள்ளுவர்(குறள் 315)

மற்ற உயிரின் துன்பத்தை தன் துன்பம் போல் கருதிக் காப்பாற்றா விட்டால் பெற்றுள்ள அறிவினால் ஆகும் பயன் உண்டோ. என நம்மைப் பார்த்துக் கேட்கிறார்.உயிரினத்திலேயே ஆறாம் அறிவு பெற்ற உயிர் எனப் பெருமை கொள்கிறோமே அந்த ஆறாம் அறிவினால் பெற்ற பயன் ஏனைய உயிரினத்தையும் பயிரினத்தையும் கண்ணும் கருத்துமாய்ப் பாதுகாப்பதுதான்.”என்று கூறி வகுப்பை இனிதே நிறைவுசெய்தார்.